உ

கடவுள் துணை

அகஸ்தியருக்கு உபதேசித்த

# சுப்பிரமணியர் ஞானம் - 200



B. இரத்தின நாயகர் அண்டு ஸன்ஸ்,

திருமகள்விலாச அச்சியந்திரசாலை,

சென்னை.

இதன் விலை] 1935 [விலை அணா 8.

கடவுள் துணை

## அகஸ்தியருக்கு உபதேசித்த

# சுப்பிரமணியர் ஞானம்-200

ஆசிரிய விருத்தம்

அண்டபரா பரமான பரையின்பாதம்
ஐயனெங்க ளாதிவஸ்து பதமும்போற்றி
தொண்டர்கள்மெய்ஞ் ஞானியுட பதமும்போற்றிச்
சொல்லுமுப தேசமிரு நூறுதன்னை
மண்டலீகர் மகாயோகி மதிக்கவென்று
மருவில்லா ஞானமதை மாட்டுவேன்யான்
கண்டபடி கண்டகோ டாலியாகக்
கணக்காக ஞானமதைக் காட்டுவோமே. 1

காட்டுகிறேன் பூரணமே வெளியதாகக்
கலங்காமல் வெளியினுட பதமும்போற்றி
பூட்டுகிறேன் ரவிமதியைக் காண்பதற்குப்
புகழ்பெரிய நாதாக்கள் பாதம்போற்றி
நாட்டுகிறேன் மெய்ஞ்ஞானம் வெளியதாக
நல்வினையுந் தீவினையு மிரண்டும்போகப்
பூட்டுகிறேன் திறவுகோல் திறந்துதானும்
புத்தியுள்ள பிள்ளாய்நீ பேணிக்கேளே. 2

கேளடா அகஸ்தியனே கிருபையாகக்
கெடியான பராபரமே யொன்றேதெய்வம்
ஆளடா அதுநிலையை யறியவேணும்
அண்டசரா சரங்களெல்லாந் தெரியவேணும்
நாளடா பூரகத்தி லேறவேணும்
நல்வினையுந் தீவினையும் போக்கவேணும்
காளடா கருவுகளைக் கொல்லவேணும்
காலனையுங் கட்டறுத்துக் கொள்ளுவாயே. 3

கொள்ளடா வாசியொன்றே முத்தியாகுங்
கொடியதொரு மற்றதெல்லா முத்தியில்லை
அள்ளடா வாசிதனை யடுத்துமைந்தா
ஆதிவஸ்தை யனுதினமும் மனதில்வைத்து

மெள்ளடா மறுபடியும் யோகம்பார்த்து
　　மேன்மையுள்ள ஞானமதை மேவிக்கொள்ளு
வள்ளடா வல்லவனுகக் கண்டீராகில்
　　வஸ்தான வஸ்துவுமே வாய்க்குந்தாமே.

தாமடா வாசியென்ற குதிரையேறி
　　தத்துவந்தொண்ணூற்ருறு தனையறுத்து
ஓமடா ஓங்காரத் துள்ளொடுங்கி
　　ஓம்நமசி வாயமென்று மனதிற்றங்கி
நாமடா நமனுடைப்பட் டணமுந்தாண்டி
　　நாதாந்தச் சுடரிலே நாடிச்சென்று
வாமடா வாமத்தைக் கண்டுபோற்றி
　　வாலையெனும் பூரபரையை மனதிற்றங்கே.

தங்கியே மனதிலேயும் நிலையாய்த்தங்கித்
　　தமர்திறக்கும் வாசலுட கதவுகண்டு
அங்கியே ஆறுதல மடுத்தேயேறி
　　ஆதிவஸ்தை யனுதினமு முன்னுட்கொண்டு
எங்கியே யீராறு தலமுந்தாண்டி
　　யிடகலையும் வலகலையும் அழியச்செய்து
பங்கியே பரமான நதியுந்தாண்டிப்
　　பச்சைமயி லேறியுந்தான் பாடுவாயே.

பாடவே கின்னரியு மாலின்வீட்டிற்
　　பகல்வத்தி தீவட்டி யகல்போற்ருேனும்
ஆடமே ஐந்தெழுத்து மதிலேதோனும்
　　அப்புறமுஞ் சங்குதொனி யறிவாய்க்கேட்கும்
நாடவே தமர்திறக்கும் வாசல்தோனும்
　　நந்தியுட வீற்றிருப்பும் நட்புந்தோனும்
வாடவே வச்சிரமணி விளக்குந்தோனும்
　　வாலையுட சிலம்பொலியும் வாய்க்குந்தானே.

வாய்க்குமடா மனதழுக்கை யறுக்கவேணும்
　　வஞ்சமெனும் புத்தியையும் மாய்க்கவேணும்
ஏய்க்குமடா பேய்ப்பான பேச்சையெல்லாம்
　　ஈடழியக் கண்டுமுத லிறுத்தவேணும்
நாய்க்குமடா நாய்போலே திரியவேணும்
　　நல்லோரைக் கண்டாக்கால் வணங்கவேணும்

பேய்க்குமடா பிராணனையும் போற்றவேணும்
பிரபலங்கள் பண்ணுமற் பிலத்துநில்லே. 8

நில்லடா ஒருமனதாய் நிலையில்நில்லு
நித்தநித்தம் பிராணயம் நினைவாய்க்கூட்டு
அல்லடா கற்பமதை யறிந்தேயுண்ணு
ஆறுவரை யூடுருவி யடுத்தேயேறும்
வல்லடா வாசியைத்தான் மேலேநோக்கு
வயிரமுங்கே யிருக்கின்ற வகையுங்காணும்
அல்லடா யிப்படியே அறிந்துகொண்டு
ஆதிவஸ்தை யனுதினமு மறிவாய்ப்போற்றே. 9

போற்றடா கற்பமுண்டா யெனைப்போலாவாய்
பூருவத்தின் ஞானமெல்லாம் பொருந்தத்தோணும்
ஏற்றடா சிங்குவையும் பிடித்துமைந்தா
யென்மக்காள் நித்தமுந்தான் பீசங்கூட்டி
வாற்றடா பதின்மூன்று வருஷந்தானும்
மைந்தனே கற்பமதை மனதிற்கொள்ளு
சாற்றடா சரவணையு முனக்குத்தோணும்
சண்முகந்தா னென்றுசொல்லிச் சாற்றலாமே. 10

சாற்றலாம் வேல்முனையு முனக்குச்சித்தி
தவப்பொருளு முந்தனுக்குச் சடுதிற்கிட்டும்
ஏற்றலாம் நமன்கயிற்றை யறுத்துப்போடும்
ஈராறு தலந்தாண்டி யிருக்கலாகும்
வாற்றலாம் வச்சிரம்போற் றேகமாகும்
வழக்கான கருவிகளை மாளப்பண்ணும்
போற்றலாம் பூர்வகன்ம வினைகள்போகும்
பொல்லாப்பு ஆனதெல்லாம் போகுந்தானே. 11

தானென்ற என்குருவே அருளிச்செய்தீர்
சடாட்சரனே சண்முகனே தயவாய்நீயும்
நானென்ற நற்கருவை விட்டுச்சொல்லும்
நலமான கற்பவகை நட்புச்சொல்லும்
ஊனென்ற வாசியுட ஒழுங்குஞ்சொல்லும்
உன்முனையைக் காணுகிற ஒளியுஞ்சொல்லும்
வானென்ற வானவர்க்கு வலியநாதா
வடிவேலா யிந்தவகை மாட்டுவீரே. 12

மாட்டுகிறேன் பெண்மகனே மாணுகேளு
    மகத்தான கற்பமென்ற மார்க்கஞ்சொல்வேன்
பூட்டுகிறேன் சிகாரமென்ற நெல்லிச்சேரு
    புதுமையுள்ள மகாரமென்ற நீருஞ்சேரு
ஆட்டுகிற ஆதிவல்லை யதிலேசேரு
    யடங்காத பென்றுயாள் வல்லதுஞ்சேரு
நாட்டுகிற நாளையுந்தா னென்றநாக
    நலமான தேவியைத்தா னூட்டுவாயே. 13

நாட்டடா நாற்கோண முன்னேயிட்டு
    நவவட்ட மிட்டேயறு கோணமிட்டுப்
பூட்டடா முக்கோண மதின்மேலிட்டுப்
    புகழான பிறைவட்ட மேலேபோட்டு
மாட்டடா பென்றுயாள் முகந்தான்வைத்து
    மதிக்கவே ஆறெழுத்தை அதிலேசாத்தி
வாட்டடா கற்பமதை மனதில்வைத்து
    வாலைதனைப் பூசைசெய்து வணங்கிக்கொள்ளே. 14

கொள்ளவே நாதாக்கள் சாபந்தீரும்
    கொடியதொரு வஞ்சகங்கள் குதித்தேயோடும்
அள்ளவே யாறுதல மடுத்துக்காணும்
    ஆயிபடபாதமது அறிவால் வாய்க்கும்
மெள்ளவே வாசியைத்தான் வாங்கிமைந்தா
    மேன்மைபெற வேணுமென்று மனதிற்றங்கி
வள்ளவே வஞ்சகத்தைக் கட்டறுத்து
    மகத்தான கற்பமதை வணங்கிக்கொள்ளே. 15

கொள்ளவே மும்மூலங் கொண்டேயானுங்
    குமரனென்றே யெந்தனுக்குப் பேருமாச்சு
அள்ளவே ஆயிரத்தெட் டிதழுங்கண்டேன்
    ஆறுகற்ப மகாரமுந்தா னடக்கிக்கொண்டேன்
வள்ளலே வயிரத்திரு விளக்கைக்கண்டேன்
    வாலையுட சிலம்பொலியு மதிக்கப்பெற்றேன்
நள்ளவே நாதாந்தச் சுடரிற்சொக்கி
    நாலைந்து வாசலையு மடைத்திட்டேனே. 16

அடைத்திடவே சிலம்பொலியுங் கேட்டேன்யானும்
    ஐயையா காதிரண்டு மடைத்துப்போச்சு

படைத்திடவே ரோசமென்ற வெட்கம்போச்சு
பரிவான மயில்மீதிற் பாய்ந்துசென்றேன்
வடைத்திடவே வாசியின்மேற் சொக்கிக்கொண்டேன்
வயிரமங்கே யிருக்கின்ற வகையுங்கண்டேன்
முடைத்திடவே மும்மூலங் கொண்டதாலே
முருகனென்று மெந்தனுக்குப் பேருமாச்சு. 17

பேராகி யூராகிப் பெரிதுமானேன்
பேசாத வஸ்துவென்று பேருங்கொண்டேன்
ஆருகி யருபவுரு வெளியுமானேன்
அழியாத வஸ்துவென்று அருளும்பெற்றேன்
நேராகி நிர்மலனாய் நிர்மதியுமாகி
நீங்காத பொருளாகி நிறைந்தேன் நின்றேன்
பாராகிப் பருமலையாய்ப் படர்ந்தேயானும்
பச்சைமால் மருகனென்று பகர்ந்திட்டாரே. 18

பகர்ந்திட்டார் பராபரமு மானசோதி
பதிவான மெய்ஞ்ஞானம் பகர்ந்தேசெய்தார்
அகர்ந்திட்டார் அம்மூலம் உபதேசித்தார்
ஆறுவரை யூடுருவி அறியச்சொன்னார்
இகர்ந்திட்டா ரீராறு தலமுஞ்சொன்னார்
இரவிமதி சோலையிலே இருக்கச்சொன்னார்
தகர்ந்திட்ட விந்துவையுங் கட்டச்சொன்னார்
சண்முகந்தா னென்றுசொல்லிச் சாற்றினாரே. 19

சாற்றினார் மேல்மூலத் தருவுஞ்சொன்னார்
சராசரங்க ளுள்ளதெல்லாஞ் சார்ந்தேநின்றேன்
ஏற்றினா ரெனதுயிரா னெனக்குமைந்தா
வெல்லையில்லாப் பேரொளியை அறியச்சொன்னார்
வாற்றினார் வஸ்தோடே வஸ்தாய்நிற்க
வாசியென்ற வடிவேலை வருந்தித்தந்தார்
ஆற்றினா ரருபமாந் தன்னிலேதான்
அடங்கியே அனுதினமும் வாழ்ந்திட்டேனே. 20

வாழ்ந்திட்டேன் புருவமைய மதனிற்சென்றேன்
வாசியென்ற வடிவேலை வாங்கிக்கொண்டேன்
ஈழ்ந்திட்டே னிருவிழியை அடங்கிச்சென்றேன்
இயலான நந்தியிலே யிரங்கிவாழ்ந்தேன்

தாழ்ந்திட்டேன் சங்கரற் குபதேசஞ்சொன்னேன்
தாயான வஸ்துவையுந் தாங்கியுண்டேன்
ஆழ்ந்திட்டேன் ஆதிவஸ்துதைக் கண்டுகொண்டேன்
அதினாலே ஆறுமுக னென்றார்பேரே. 21

பெற்றபேர் ஒருவராற் சொல்லப்போமோ
பேதையென்று மனதிலையம் வைக்கப்போமோ
அற்றபே ரழிகுழியில் வீழ்கப்போமோ
ஆருயிரும் வேறென்று நினைக்கப்போமோ
சித்திபெறத் தீவினைகள் செய்யப்போமோ
தெருவீதி யெங்குந்தான் திரியப்போமோ
அற்றபேர் அரூபந் தன்னைப்போற்றி
அழகான சுடரிலே சொக்கியேறே. 22

ஏறடா பதின்மூன்று வருடமைந்தா
யென்மகனே மும்மூல மெண்ணிக்கொண்டு
காரடா கருவிகளைக் கொன்றுதானுங்
கருஞ்சாரை ரெண்டுமுதற் களற்றி நீயுஞ்
சேரடா திங்கென்ற மௌனம்பூட்டித்
திரிபுரையை யனுதினமும் நெஞ்சில்வைத்து
நேரடா நித்தமுந்தான் வீசங்கூட்டி
நேர்மையுடன் பரகெதியில் நீஞ்சுவாயே. 23

நீஞ்சலாய் நிமிஷத்திற் பெற்றுநீயும்
நிலையான பொருள்தன்னை நினைத்துக் கொண்டு
பாஞ்சுபார் வாசியென்ற பதியிலேறிப்
பராபரத்தை யனுதினமும் நெஞ்சில்வைத்து
ஆஞ்சுபா ரைந்தெழுத்தை நெஞ்சில்வைத்து
அனுதினமு மும்மூல மறிவாய்க்கொண்டு
வாஞ்சுபார் வாசியைத்தான் நாட்டஞ்செய்து
வளக்கான பெண்ணுசை மனத்திற்றள்ளே. 24

தள்ளடா படுகுழியில் விழுகாதப்பா
தாயான சிற்பரையை மறவாதப்பா
அல்லடா பதின்மூன்று வருடமட்டும்
அழகான போகமுந்தான் அறிவாற்றள்ளு
மெள்ளடா கடுகொடுநல் லெண்ணெயுந்தான்
மேவியே தள்ளடா விரைந்துசொன்னேன்

தள்ளடா பதின்மூன்று வாண்டுசென்றால்
நலமான விந்துமுதற் கட்டும்பாரே. 25

பாரென்று பராபரனே பகர்ந்துசொன்னீர்
பதிவான மும்மூலம் போக்கச்சொன்னீர்
ஆமென்ற தத்துவத்தை யடக்கச்சொன்னீர்
ஆயிழையாள் போகமதை யகற்றச்சொன்னீர்
நானென்ற வாசியுட னாட்டஞ்சொன்னீர்
நாதாந்தப் பேரொளியின் னட்புஞ்சொன்னீர்
காரென்ற யோகத்தைக் கலந்துசொல்லுங்
கருவான மந்திரத்தைக் காட்டுவீரே. 26

காட்டுகிறே னறிவுள்ள பிள்ளாய்கேளு
கருவாகப் பதின்மூன்று சென்றபின்பு
ஆட்டுகிற அம்மென்று மௌனமூட்டி
ஆதிவல்லைதி யனுதினமு மறிவாய்க்கொண்டு
நாட்டுகிறேன் பதினெட்டு மாதமைந்தா
நலமாக வோரிடத்தில் நாடிநின்று
கூட்டுகிற குருபதத்திற் கூக்கலிட்டு
கூசாமல் மௌனத்தைக் கொள்ளுவாயே. 27

கொள்ளவே பாசிபய றாகுமாகுங்
குருவைநெல் பச்சரிசி தானுமாகும்
மெள்ளவே ஆவின்பால் தன்னிற்பொங்கி
மெய்ஞ்ஞானம் வேணுமென்று விரும்பிநீயுந்
தள்ளவே நித்தமொரு நேரங்கொள்ளு
தப்பாமற் பசிதானும் தளர்ந்துபோகும்
விள்ளவே யோகமதை விரும்பிப்பாரு
மெய்ஞ்ஞானி யென்றுவெளி யேறலாமே. 28

ஏறலா மாயிரத்தெட் டிதழும்தோணும்
என்மகனே அமுதமுந்தான் குமுளிபாயும்
மாரெலாம் விந்துவது கட்டிப்போகும்
அசையாத மணிபூரக மடங்கிநிற்கும்
பாரெலாம் பருமணியாய் வெளுத்துப்போகும்
பச்சைமயி லுந்தனுக்குப் பகர்ந்துயீவார்
நேரெலாம் பரகெதியு முனக்குக்கிட்டும்
நித்தியமு மமுதந்தா னுண்ணலாமே. 29

உண்ணலா மதைவிட்டார் கற்பமில்லை
ஒருமணியாய்த் திரட்டிவைக்கு முறுதியாகத்
திண்ணலா மதுவல்லோ கற்பங்கற்பந்
தீவினைகள் தான்கற்றுந் திடமாய்ச்சொன்னேன்
நண்ணலாம் வூசிநடு வீதிதோறும்
நாலைந்து வாயலையு மடைத்துக்கொள்ளும்
கண்ணலாங் கருவிழியுஞ் சொருகிப்போகும்
காரணசற் குருவென்று கருதுவாரே. 30

கருதவே யென்குருவே தடமுஞ்சொன்னீர்
காரியமாய் வாசியைத்தான் அடக்கச்சொன்ன
அருதவே யாறுதலந் தெரியச்சொன்னீர்
அப்பாவும் போகமதை யடக்கச்சொன்னீர்
பொருதவே யெப்படித்தான் வாசிதன்னைப்
போதரவாய்க் காணுகிற புகலுஞ்சொல்லுங்
கருதவே மும்மூலம் பிரித்துச்சொல்லுங்
கருவூரிற் காங்கயனே கருவாய்த்தானே. 31

கருவாகச் சொல்லுகிறேன் மானுகேளு
கருவான குண்டலியை மேலேநோக்கி
உருவாக மேனோக்கிப் பார்க்கும்போது
உத்தமனே பிடரிவழி யுயர்ந்துமோடும்
மருவாக நித்தமுந்தான் பீசங்கூட்டு
அப்பனே வருடம்பதின் மூன்றுமட்டும்
குருவாக நீயறிந்து கூர்மைபாரு
குருவழிய வாசியுந்தான் குதியாதென்றே. 32

குதியாது குறுகாது உடல்தானப்பா
கூர்மையது நீளாது குறையாதப்பா
அழியாது உடல்தானு முப்பாதப்பா
அருபசுடர் தன்னிலே அறிவாய்க்கூட்டும்
பதியாது பதியிரவி மேலேநோக்கும்
பலபல விதங்களெல்லாம் பாழாய்ப்போகும்
நதியாது நதிச்சாரை கட்டிப்போகும்
நமனுடைய நிலையெல்லாம் நாசமாமே. 33

நாசமறப் பண்ணுமடா மும்மூலங்கொண்டால்
நல்வினையுந் தீவினையு மிரண்டும்போகும்

பாசமறப் பண்ணுமடா வஸ்தையுண்டாற்
பலபல புத்தியெலாம் பாழாய்ப்போகும்
வாசமறப் பண்ணுமடா வாசிநாட்டம்
வழக்கான சுழிமுனையும் வாரிக்கொள்ளுந்
தாசமறத் தூரியமுந்தான் தூர்ந்துபோகுந்
துவாதசாந் தத்திலேறி தொழுதுநில்லே. 34

நில்லடா வாக்குமன மொன்றாய்நில்லு
நிட்சயத்தைப் பற்றியினி நினைவாய்நில்லு
அல்லடா ஆறுதலங் கடந்தீரானல்
ஆயிரத் தெட்டுமாத் தழுகுமுண்டு
வல்லடா வாசியைத்தான் மேலேநோக்கு
மைந்தனே கீழ்நோக்க மாட்டாதப்பா
அல்லடா யிதையறிந்து செய்தீரானல்
ஆத்மாவும் நீயாச்சு ஐயபாரே. 35

பாரப்பா மும்மூலம் பகரக்கேளு
பாழான அன்னமுந்தான் புசித்தீரையா
ஆரப்பா மூன்றுபங்கு கழிந்துபோச்சு
ஆத்மாவும் உன்னைவிட்டு அகன்றுபோகும்
நேரப்பா மூன்றையுந்தான் கொண்டாயானல்
நிட்சயமாய் மும்மூலம் நிலையிதாகும்
காரப்பா ஆத்மாவுங் கழன்றுபோகார்
கள்ளனையும் ஒருநிலையில் கட்டலாமே. 36

கட்டலாங் கபடற்ற சிந்தனவாய்
கைலாய தேகமடா கருணையாகும்
வெட்டலாங் காலனையு மிரட்டிமைந்தா
வேல்முனையி லேறிவினை யாடலாம்நீ
தட்டலாந் தமர்திறக்கும் வாசல்தோணுந்
தாயான சிற்பரையுந் தனதேயாவாள்
முட்டலாஞ் சூரசங் காரஞ்செய்து
முடுக்கலாங் கருவிகளை முடுக்கலாமே. 37

முடுக்கலா முச்சுடரின் தைலத்தாலே
முதலான மனக்குளிகை முறையாய்மைந்தா
தட்டலாம் நாதாந்த (நந்தி) தன்னிலேறி
தனதான வுறன்முறையைச் சண்ணிப்போடு

கட்டலாங் காமத்தைக் கருவாய்மைந்தா
காரணமா மும்மூலக் கருணையாலே
கட்டலாம் நாதமணி யொன்றதாக
நலமாக வல்துவுட நாட்டந்தானே. 38

நாட்டமுடன் கும்பகபூ ரகமுமையா
நடுவான ரேசகமு மொன்றாயொன்றாய்
வாட்டமுட னொன்றாகக் கயமுவாங்கி
வாசையுடன் மேனோக்கி யெழுவாயண்ணா
நாட்டமுடன் சதகோடி ரவியுந்தோணுந்
தமர்திறக்கும் வாசலங்கே தயவாய்த்தோணும்
பூட்டமுடன் பூரகந்தி லேறிறுக்கால்
புத்திரனே பொல்லாப்பு போகுந்தானே. 39

போகுமடா பொல்லாப்பு சிவசெந்து
புத்திரனே மற்றதெல்லாம் நாமேயாகும்
ஆகுமடா அறுமுகனைக் கண்டோர்க்கெல்லாம்
ஆறுவகை யூடுருவி அறிவிற்சேர்க்கும்
நாகுமடா நாதமணி தானேகட்டும்
நல்வினையுந் தீவினையு மாண்டுபோகும்
மாகுமடா பராபரமு முனக்குச்சித்தி
பதிவாகப் பரியேறி நடத்தலாமே. 40

நடத்துவா யோகமுந்தான் தாண்டிந்தாறல்
நலமான கும்பகத்தில் நாடிச்செல்லு
அடத்துவா யோங்காரத் துள்ளொடுங்கி
ஆதிவஸ்து வுண்டென்றும் அறிவிற்றங்கி
முடத்துவாய் முன்னணியாய்ப் பூசைசெய்து
மூதண்ட பிரமனையு மோதித்தாக்கிக்
கடத்துவாய் கரிமாலை கருவாய்க்கொண்டு
கருவிகளைச் சீரழித்து கடைத்தேறுவாயே. 41

ஏறுவா யிப்படியே ஆனபின்பு
என்மகனே அங்கிஷ்ட மாகிப்போவாய்
தேருவாய் கற்பூரச் சுடர்போல்நிற்பாய்
தேவியுந்தா னனுதினமுந் தொண்டுசெய்வாள்
நேருவாய் பரகெதியு முனக்குக்கிட்டும்
நேரான ரவிமதியு மாண்டுபோகும்

பாருபார் பராபரனு நீயுமாவாய்
பழுதில்லாச் சித்தனென்று பகரலாமே. 42

பகரலா மென்றுநீ சொன்னீரையா
பதிவான யோகமென்ற பதுவைசொல்லும்
அகரலா மரிபீடம் அறியச்சொல்லும்
ஐந்தெழுத் தானத்தையு மறிவாய்க்காட்டும்
இகரலாம் பிராணய மறியச்சொல்லும்
இந்திரகிரி மலையிலே யிருக்கச்சொல்லுந்
தகரலாம் நந்தியுட தனுவுஞ்சொல்லுஞ்
சண்முகனே சடாக்ஷரனே சாற்றுவீரே. 43

சாற்றுகிறே னென்மகனே மாணுகேளு
சத்தியமாய் யோகமென்ற தனுவைச்சொல்வேன்
ஏற்றுகிறேன் முன்சொன்ன மௌனம்பூட்டி
யின்பமுடன் பேரொளிவு மெண்ணிக்காணும்
வாற்றடா நித்தமுந்தான் ஒண்ணரைபீஜம்
வளமான பிராணயம் வசமாய்க்கூட்டு
போற்றடா பதினெட்டு மாதமட்டும்
புத்திரனே பிராணயம் பொருந்திக்கூட்டே. 44

கூட்டியே யோகமுந்தான் பார்த்தீரானல்
குறையாத பேரொளியைக் குணமாய்க்காண்பாய்
ஆட்டியே அரூபவெளி நீயுமாவாய்
ஆயிரத்தெட் டிதழ்மலரும் அறிவாய்க்காணும்
நாட்டியே அமுதமுந்தான் வடியுமைந்தா
நகரமென்ற பேச்செல்லாம் நாசமாகும்
பூட்டியே பூரணம்போ லிலங்குந்தேகம்
புதுமைசார சாங்களெல்லாம் போக்கலாமே. 45

போக்கலா மைந்தெழுத்தின் வகையைக்கேட்டாய்
புத்திரனேயைந்தெழுத்தைப் பிரித்துச்சொல்வேன்
ஆக்கலாஞ் சிகாரமென்ற நீருமொன்று
அப்பனே மகாரமென்ற நீருமொன்று
வாக்கலாம் உகாரமென்ற நாதமொன்று
மைந்தனே அகாரமென்ற வஸ்துவொன்று
நாக்கலாம் நாதமணி சிவந்தானென்று
நலமாகப் பஞ்சகரு யிதுதானச்சே. 46

ஆச்சப்பா யிதுவல்லோ கற்பங்கற்பம்
அடங்காத மும்மூலம் அருமையாச்சு
ஏச்சப்பா சொல்லக்கேள் வேறிருக்குதென்று
என்மகனே யென்னசொல்வே னிந்தமார்க்கம்
வாச்சப்பா யிதையுண்டால் வலுத்துப்போச்சு
வாசியென்ற சவ்வாரி வருகும்போது
மூச்சப்பா மூச்சற்ற யிடமுந்தோணும்
மூலையான சுடர்தனிலே முழங்கலாமே. 47

முழங்கவே கருவிகளுங் குதித்தேயோடும்
முச்சுடரு மொன்றாகி முழங்கிநிற்கும்
தழங்கவே தேகமுந்தான் வலுத்துப்போகுந்
தாயான சிற்பரையுந் தனதேயாவாள்
கழங்கமில்லா சுழிமுனையில் நாட்டம்வேணும்
கண்டறிந்தோன் சித்தனவ னாகவேணும்
இணங்கலா மிம்மூலங் கொண்டாயானால்
ஈசனுக்கு மேலாக விருக்கலாமே. 48

இருக்கவடா சொல்லுகிறே னின்னங்கேளு
யிதமான பூசையுந்தான் செய்யும்போது
அருக்கவடா ஓம்நமசி வாயமென்று
ஆறுதல வீட்டினையு மடக்கஞ்செய்து
பெருக்கவடா பிராணயங் கூட்டவேணும்
பிசகாமல் சிங்குவையும் பூட்டவேணும்
நெருக்கவடா நிர்ணயமாய் நின்றீரானால்
நிசமான பரகெதிக்கு நீஞ்சலாமே. 49

நீஞ்சலா மிதைவிட்டால் கற்பமில்லை
நித்தமுந்தா னிம்மூலங் கொள்ளவேணும்
பாஞ்சாலஞ் சிகாரமுடன் மகாரம்ரெண்டும்
பத்தியுடன் அணுவளவு விட்டிடாதே
வாஞ்சலாம் பதின்மூன்று வருடங்கொள்ளு
வாசியென்ற மயில்மீதி லணைந்துநில்லு
ஆஞ்சலா மைவருந்தான் பட்டுப்போவார்
ஆன்மாவைக் காணலா மறிந்துபாரே. 50

பாரப்பா அப்படியே உண்டேன்யானும்
பலவிதயோ சனைகளெல்லாம் பாழாய்ப்போச்சு

ஆரப்பா மும்மூல மடுத்துக்கொண்டேன்
ஆதிவஸ்தையனுதினமும் பணிந்துகொண்டேன்
நேரப்பா யோகத்தினிலே (யாகி) நின்றுகொண்டேன்
நிட்சயத்தைப் பத்தியுட நிலைத்துக்கொண்டேன்
காரப்பா கருவிகளும் பட்டுப்போச்சு
கார்த்தேனென்று எந்தனுக்குப் பேருமாச்சே. 51

பேராகி ஊராகி பெரிதுமானேன்
பின்னுமுன்னு மோடுகிற தலையுமானேன்
நேராகி நிலையாகி நின்றுக்கொண்டேன்
நிட்சயத்தைப்பத்திசெய்து நிலைத்துக்கொண்டேன்
பாராகிப் பருவமதாய் பலவிதமுமானேன்
பச்சைமயி லேறியுநான் பரிந்துசென்றேன்
நாராகி நாதமுந்தா னுண்டுகொண்டேன்
நானென்று மெந்தனுக்கும் பேருமாச்சு. 52

நானென்று பேரெடுக்க வருமோசும்மா
நாடியே மும்மூலங் கொள்ளாதார்க்குக்
காதமல்லத் தூரமல்லச் சொன்னேன்பாரு
கண்மூக்கு மத்தியிலே கருதிப்பாரு
பாகமல்லோ பரகெதியுங் கிடைக்குமைந்தா
பருமணியாய்த் தேகமுந்தான் திரண்டுபோகும்
ஆகமல்லோ ஆறுதல முருவியேறும்
அதினலே ஆறுமுக மென்றுபேரே. 53

பேச்சிட்டு வாயினுற் பேசினலும்
பிழைவருமே மும்மூலம் பிரித்துச்சொன்னல்
ஆச்சிட்டு ஆதிவஸ்தை யறியாவிட்டால்
அனலாகக் கொடுத்திடுமே தேகமப்பா
வாச்சிட்டு வாசியிலே யேறவிட்டால்
வாரிவிடு முன்னையுந்தான் மைந்தாசொன்னேன்
மூச்சிட்டு முனையில்நின்று முழங்கிநீயும்
முச்சுடரா யென்றைக்கு முழங்கிநில்லே. 54

நில்லடா மும்மூலங் கொண்டுதானும்
நிலையான வாசியைத்தா னினைத்துப்போற்று
அல்லடா கற்பமுந்தான் கொள்ளாமற்றான்
அறிவான வாசியைத்தான் பெற்றிருக்கால்

மெல்லடா தேகமுந்தான் ஒத்துப்போகும்
மேன்மையுள்ள வாசியுந்தான் சுத்துவோடும்
வல்லடா வல்லவனுக் கற்பங்கொண்டு
வாய்வான வாசியைத்தான் வாங்குவாயே. 55

வாங்கியிட ரவிகுளிகை மதியில்கட்டும்
வாசிவிடும் பிரமத்தில் வளர்ந்தேநிற்கும்
ஏங்கியிட மனக்கண்ணுந் தீர்ந்துபோகும்
எல்லையில்லாப் பேரொளியு மொன்றும்வாய்க்கும்
தாங்கியிடந் தமர்ந்திருக்கும் அமுதம்பாயுஞ்
சண்டனென்ற ஆணையுஞ் சண்ணிக்கொள்ளுந்
தூங்கியிட மும்மூல மற்றுப்போகும்
முக்கியமாய்ச் சிவயோகம் வாய்க்குந்தானே. 56

வாய்க்குமோ வாயாதோ வென்றுநீயும்
மனதிலே தயங்கியினி அலையவேண்டாம்
ஏய்க்குமே ஞானமெல்லா முன்னைக்கூட
யேகாந்தப் பிரமைவந்து யிழுத்துக்கொள்ளுந்
தாய்க்குமே தாய்பதத்தைப் பூசைசெய்து
தானவனாய்த் தானாக நிலைத்துவாழ்ந்து
காய்க்குமே கருவிகளைக் கழற்றிப்போட்டு
காரணசற் குருவைநீ கண்டுகொள்ளே. 57

கொள்ளவே கருவிகளைக் கொன்றுபோட்டேன்
கோளற வாசியைத்தான் கூர்ந்துபார்த்தேன்
அல்லவே பருமுனையை யறிந்துகொண்டேன்
அப்புறம் பனிரெண்டு தலமுங்கண்டேன்
வல்லவே பனிரெண்டை யடக்கிச்சென்றேன்
வாய்வான சுழல்காற்றில் மருவிச்சென்றேன்
மெல்லவே பூமலர்கள் வாசங்கண்டேன்
மேதினியைத்தான் படைத்தேன் விரித்துக்கொண்டேன்.

கேளடா மேகநிறம் மூண்டுகொண்டேன்
கேணியெனும் முக்குழியைத் தள்ளிப்போட்டேன்
ஆளடா அவ்வூரி லிருந்துவாழ்ந்தேன்
அதிசயங்க ளுள்ளதெல்லா மறிந்துகொண்டேன்
நாளடா நாள்வளப்பஞ் செய்யாமற்றான்
நந்திதனி லேயிருந்தா னடனஞ்செய்தேன்

பாளடா பஞ்சபூத நிலையுங்கண்டேன்
    பாய்ந்துமதில் மீதேறிப் பரிந்திட்டேனே. 59
பரிந்திட்டே னவ்வூரில் குடிபுகுந்தேன்
    பஞ்சவர்ணப் பாவாடை பரிந்துகொண்டேன
அறிந்திட்டே னூரி லடங்கிநின்றேன்
    ஆதிவல்லு வானதையு மறிவாற்கண்டேன்
தெரிந்திட்ட ஞானநிலை தன்னைக்கண்டேன்
    நிட்சயமாய்த் தத்துவத்தி னுறுதிகண்டேன்
அறிந்திட்டேன் வாசிவடி வேலைவாங்கி
    வல்லவனுக் குபதேச மாட்டினேனே. 60
மாட்டினேன் பூருவத்தில் சித்தினூலும்
    மதலையா யனுதினமு மதிக்கப்பெற்றேன்
நாட்டினேன் சிங்குவைத்தான் பிடித்ததாலே
    நமனெழுத்தும் நாடிடவே நாசமாச்சி
வாட்டினேன் வாசியிலே வளர்ந்ததாலே
    நமனெழுத்தும் நாடிடவே நாசமாச்சி
வொட்டினேன் வாசியிலே வளர்த்ததாலே
    வாலைக்குப் பிள்ளையென்று மதிக்கப்பெற்றேன்
காட்டினேன் கருநெல்லி யுண்டதாலே
    காரணசற் குருவென்று கருதலாச்சே. 61
கருதவே புலியூரிற் புகுந்துவாழ்ந்தேன்
    கபடற்ற சித்தனென்று கருதலானேன்
அருதவே ஆறுபில மடுத்துக்கண்டேன்
    அதினாலே அரசனுக்கு அசானுனேன்
பொருதவே புலியூர்க்கு மேற்கேசென்றேன்
    பொல்லாப்புக் களங்கமதைப் போக்கிவிட்டேன்
கருதவே மகாரமென்ற நீரையுண்டேன்
    கர்த்தனையு மதனாலே காணலாச்சே. 62
காணாத காட்சியெல்லாங் கண்டுகொண்டேன்
    கருதவே வேடமுந்தான் கருதிக்கொண்டேன்
பூணாத ஆபரணம் பூண்டுகொண்டேன்
    புகழான வேடமுந்தான் தரித்துகொண்டேன்
நாணாத நாணமெல்லாம் நாசமற்றேன்
    நல்வினையுந் தீவினையு மிரண்டுமற்றேன்
தானான மயில்மீதி லேறிக்கொண்டேன்
    தந்திமுகன் றனக்கிளைய சாமிநானே. 63

நானென நானவனாய் நானுமானேன்
நங்கைசிவ காமிக்குத் தனையனானேன்
ஊனான உற்பனமா யுலகுமானேன்
உள்வீட்டுக் குள்ளிருக்கு மௌனியுமானேன்
மானான மாலயனு நானுமானேன்
மரகதப்பச் சையம்பாள் மதிக்கப்பெற்றேன்
ஆனான அருபவெளி ஒளியுமானேன்
ஆதிவஸ்து வானதுவும் நன்றாய்ப்பாரே. 64

பாரப்பா உலகமெல்லாம் படர்ந்துநின்றேன்
பத்தருட பங்கிலேயும் பதியாய்வாழ்ந்தேன்
ஆரப்பா அஷ்டாங்க நிலையைப்பெற்றேன்
அரிதான மயக்கமதா யருளாய்நின்றேன்
நேரப்பா நிறைமதியாம் ஆத்தாள்வீட்டில்
நிறுத்தினின் றிருக்கையிலே திதானங்கண்டேன்
காரப்பா கருக்கிடையுங் குருக்கிடையுங் கண்டேன்
கபாலமங்கே தூரத்திலிடுங் கண்டுகொள்ளே. 65

கொள்ளடா நான்சொன்ன மூலம்போலே
குருவழியச் சொல்வார்கள் கூர்ந்துகேளு
அல்லடா யென்னைப்போல சொல்வாருண்டோ
அடங்காத மௌனசித்து மூலந்தன்னை
வல்லடா வல்லவர்க்குச் சொல்லிவிட்டேன்
வழிபாதை யானதொரு வகைகளெல்லாம்
மெல்லடா யிதையறிந்து மெய்ஞ்ஞானங்கொண்டால்
மேதினியிற் சித்திதனை யாடலாமே. 66

ஆடலா மம்பரத்தி லடுத்துயேறி
ஆயிரமு முக்கம்பத் தரியில்நின்று
பாடலாம் பதினெட்டு இராகபாஷை
பருமணியிற் சென்றுபாரி யேறிக்கொள்ளும்
நாடலாம் மாணையுந்தா னுதைத்துப்போடு
நரகமென்ற பேச்சையெல்லாம் நாசமாக்கும்
காடெல்லாம் வெட்டிக்கரு வறுத்துப்போடுங்
கருச்சாரை வெண்சாரை கழன்றுபோமே. 67

கழறுகின்ற நரம்பெல்லா மிஞ்சிப்போகுங்
கனமான மும்மூலக் கணையினாலே

அழறுகின்ற பாசமெல்லா மற்றுப்போகும்
அரூபவெளி தன்னிலே யடங்கிநிற்கும்
தளருகின்ற தாய்பதத்திற் றுனேசேர்க்குந்
தத்துவந்தொண் ணூற்றாறுந் தடுத்துப்போடும்
வளருகின்ற வாய்வான யோகத்தாலே
வச்சிரமிட்ட தேகமாய் வளருந்தானே. 68

வளருமடா யிந்தமுறை யறியவேணும்
மரகதப்பச் சையிலே வளரவேணும்
அளருமடா அழிகுழியைத் தள்ளவேணும்
ஆயியுட அட்சரத்தைத் தெரியவேணும்
தளருமடா தாய்பதத்தைப் போற்றவேணும்
தத்தையெனும் வெளிதாண்டி யிருக்கவேணும்
கழறுமடா காமத்தைக் கட்டவேணும்
கருவிகளைக் கொன்றுகடைத் தேறுவாயே. 69

தேறுவது லேகுவல்ல வாய்ப்பேச்சல்ல
தெளிந்துசிவ யோகியென்றுந் தேறுவான்காண்
மேருவது மோதல்போல் பருவமாவான்
மேலான பதவியிலே மேவிக்கொள்வான்
ஆருவது ஆசையென்ற கலக்கம்போகும்
அகஸ்தியனே உந்தனுக்கு அறியச்சொன்னேன்
நேருவது நிட்சயமும் தானங்காட்டும்
நிலைவறையிற் றீபம்போல் நிற்கலாமே. 70

நிற்கலா மென்றுமே சொன்னீரையா
நிமலனுக்கு உபதேசம் நீருஞ்சொன்னீர்
எக்கலா மீராறு தலமுஞ்சொன்னீர்
யிந்திரகிரி பர்வதத்தி லேறச்சொன்னீர்
மிக்கலாம் ஆத்துமாவை என்றேயன்றி
மேதினியில் தெய்வங்க ளுண்டோசொல்வீர்
பக்குவமாய் ஞானமது பதியச்சொன்னீர்
பரவெளியி லுண்மைதனைப் பகருவீரே. 71

சொல்லுகிறேன் என்மகனே மாணுகேளு
சூட்சமெல்லா மவனுடைய சூட்சமல்லால்
வெல்லுதற்கு வேறுமொரு விதமுங்காணேம்
வெட்டவெளி யென்றுநிசம் வெளியேமைந்தா

அல்லுகின்ற அன்பமாவே யென்றேதெய்வம்
அவனியிலே தெய்வமுந்தா னையாயில்லைத்
தள்ளுகிற கருவிகளைத் தள்ளிருக்காற்
றானவனை தனக்குள்ளே யறியலாமே. 73

அறியலாம் பூரணமே யென்றேதெய்வம்
அரூப மானதுவு மதுதானப்பா
தெரியலா மும்முறைங் கொண்டால்மைந்தா
தீவினைகள் தானீங்கித் தெளிந்துபோவாய்
அறியலாம் வழிபாதை யிதுதானப்பா
வஸ்துவையுங் காணுதற்கு வகையிதாகும்
பரியெல்லாம் பரிபோகும் பாவம்போகும்
பரகெதிக்குப் பாய்ந்துயினி யேறலாமே. 73

ஏறலா மென்றுசொல்லி சொன்னீரையா
யிவ்வுலகில் தெய்வருல மென்றுசொல்லி
பேரெலாங் கூடிஆ லயந்தான்கட்டிப்
பேசாத கல்லுகளைப் பிடித்துவைத்து
பாரெலாம் பூசைநை வேத்தியஞ்செய்து
பலருமே கூடியதைப் பணியலாமோ
வேறலால் அவரொருவ ரென்றுசொன்னீர்
வேல்முருகா யிந்தவகை விளம்புவீரே. 74

விளம்புகிறே னறிவுள்ள மைந்தாகேளு
விதமாக அப்படியு மில்லாவிட்டால்
நலம்பெறவே ஞானமதைப் பார்த்துத்தானும்
நாட்டிலுள்ள ஜனங்களெல்லாம் போகியாவார்
தலம்பெறவே அதையறிந்து சிவனுரையா
தான்படைத்த வுலகத்தை மயக்கிப்போட்டார்
வளம்பெறவே ஞானமெல்லா முன்னால்விட்டால்
வஸ்துவான பொருளறியா வரிதுகாணே. 75

காணப்பா கோவிலென்றுந் தீர்த்தமென்றும்
காசினியிற் செம்பாலே விக்ரகந்தானென்றும்
பேணப்பா உலகத்தோர் தங்களைத்தான்
பேய்போலே திரிந்தலையப் படைத்தாரீசன்
நாணப்பா தேவதையைப் பணிந்திட்டாலும்
நதிகளெல்லாம் தேடிப்போய் முழுகினாலும்

ஊணப்பா உள்வீட்டுக் குள்ளிருக்கும்
மௌனிவுள்ள வஸ்துவைக் காண்பரிதுகாணே. 76

காணடா யெழுத்துதா னென்றுசொல்லே
காசினியோர் செய்கின்ற கதையைக்கேளு
ஆணடா அஷ்டான நியமஞ்செய்து
அனேகநதி தெய்வஸ்தலந் தொழுதிட்டாலுந்
தானடா தவமுமல்ல முத்தியல்ல
தானிருந்து வாழ்வோமென்று ஸ்நானஞ்செய்து
ஊனடா உருண்டவர்கள் கோடாகோடி
உத்தமனே ஞானநிலை உறுதிக்காணே. 77

உறுதியாய் ஞானத்தைப் பாராமற்று
றுருண்டவர்கள் கோடான கோடியப்பா
அறுதியாய் ஞானமதைப் பார்க்கவேணு
மான்மாவை யனுதினமும் தேற்றவேணும்
நிறுதியாய் நிட்சயத்தை யறியவேணும்
நீடூழி காலமுந்தான் வாழவேணும்
வறுதியாய் வாழ்வான கயிலைநோக்கி
வகையான மும்மூலம் வருந்திக்காணே. 78

காணப்பா மனதடங்கி அறிவில்நில்லு
காரணமாய்ச் சற்குருவைக் கண்டுபோற்று
பூணப்பா முன்சொன்ன மூலமென்னும்
புவனசரா சரங்களெல்லா மறிந்துபாரு
நாணப்பா அப்படியே யிருந்துவாழ்ந்தேன்
நந்திதரி சனங்கண்டு நடுவாய்நின்றேன்
ஊணப்பா உலகினுடத் திரியமற்றேன்
ஒடுக்கான கம்பத்தில் ஒடுங்கினேனே. 79

ஒடுங்கினேன் ஓங்கார நிலையிற்குள்ளே
யுற்பனமாய்ச் சிவலிங்க முள்ளேகண்டேன்
நடுங்கினேன் மும்மூலங் கொள்ளும்போது
நாற்பத்து முக்கோணம் நடுவாய்ச்சென்றேன்
அடங்கினே னுன்மாவுக் குள்ளேமைந்தா
அடங்காத சித்தனென்று அறிவுட்சேர்ந்தேன்
தடங்கினேன் நந்திதனி லேமிக்கொண்டேன்
தாய்பதத்தை யென்னாளும் போற்றினேனே. 80

போற்றினே னெவ்வுயிரும் நான்தானென்று
புத்திரனே பூர்வகன்ம வினைகள்போக
ஏற்றினேன் முக்கோண ரவிக்குள்ளாக
வியல்பான மும்மூல மேற்றிக்கொண்டேன்
வாழ்த்தினேன் பாஷாண மூன்றுங்கொண்டேன்
வஸ்தான வஸ்தோடே வணங்கிச்சென்றேன்
கார்த்துநான் கருவிகளைக் கொன்றதாலே
கார்த்திகையீஸ் வரனென்று மெனக்குப்பேரே. 81

ஈசனாய் எங்குமாய்ப் பரந்தே நின்றேன்
இமையார்க்கு தெய்வமா யிருந்துவாழ்ந்தேன்
வாசனும் வாசனாய் வாழ்ந்தே நின்றேன் [ன்
வாய்த்ததொருமூன்றெழுத்தை அறுத்துகொண்டே
காசினியி லியாவருமே தெளிந்துபோற்றி
கருதினேன் ஞானமிரு நூற்றுக்குள்ளே
பாசனாய் பாசமதை யறுத்துப்போட்டேன்
பச்சைமயில் மீதேறிப் பறந்திட்டேனே. 82

பறந்திட்டேன் பராபரத்திற் பாய்ந்துயேறி
பல்லாயிரம் கோடியண்டம் பாய்ந்துசென்றேன்
அடைத்திட்டேன் அரூபவெளி தானுமாகி
ஆயிரத் தெட்டுமல ராகிநின்றேன்
நிறைந்திட்டே னிமலியுட பாதம்போற்றி
நீசனென்ற சூரனையும் நிறையாய்க்கொன்றேன்
வரைந்திட்டேன் வாய்வான காட்டினாலே
வாசியென்ற வடிவேலை வாங்கினேனே. 83

வாங்கினேன் வேலையுந்தான் கூர்மைசெய்து
வஞ்சனென்றவரையும் வதைத்துக்கொண்றேன்
ஏங்கியே சூரனையு மிறுத்திக்கொன்றேன் [ன்
இன்பதுன்ப மிரண்டையுந்தான் நீக்கிப்போட்டே
தாங்கியே தாய்பூசை செய்துக்கொண்டேன்
தயங்கியே உறன்முறையைத் தகர்த்துபோட்டேன்
ஓங்கியே ஒருநிலையா யொடுங்கிநின்றேன்
ஓம்நமசி வாயமென்று உரைத்திட்டேனே. 84

உரைத்திட்ட ஞானமெல்லாம் பார்க்கவேணும்
உத்தமனே உலகத்தி லிருந்தாலென்ன

துறைந்திட்ட மானபொருள் தேடியென்ன
துசங்கட்டி பூவுலகை யாண்டுமென்ன
நிறைந்திட்ட மாடமும்தான் கூடங்கூட்டி
நீனிலத்தில் திரிந்ததனால் வருவதேது
பறைந்திட்ட பராபரத்தைப் பத்திநீங்கள்
பார்தனிலே நெடுநாளும் வாழவென்றே. 85

வாழவென்று அகஸ்தியனே வகையுஞ்சொன்னேன்
வாய்த்ததொரு ஞானமெல்லா மதிக்கச்சொன்னேன்
தாழ்வென்று கேட்டால் யென்னசெய்வோம்
தமர்க்கிளையுங் கடைத்தேற மாட்டாதப்பா
நாளைவந்து எமன்பிடித்துப் போனாலுந்தான்
நாதாந்த சொர்க்கமுந்தான் வாராதப்பா
தாழ்வென்று நீங்களுந்தான் கெட்டுப்போனால்
தானென்ன செய்வதடா தானாய்நில்லு. 86

தானவனாய்த் தன்மனமாய் நினைக்கவேணும்
சச்சிதா னந்தவொளி தாண்டவேணும்
ஊனென்ற உலகத்தில் வாழவேணும்
உபாயம திற்சிறீங் காணவேணும்
நானென்று வென்றுகவி பாடினாலும்
நாதாந்த பேரொளிவு நட்டைக்காணர்
ஆனை ஆதியெல்லைத யறிந்தமைந்தா
அசுரர்கிளை தங்களையு மறுத்திடவே. 87

அறுக்கவே வேணுமடா மனதழுக்கை
யறுத்தாக்கா லவன்யோகி யவனேசித்தன்
பெருக்கவே பிராணயங் கண்டுநீயும்
பிசகாமல் பிராணயங் கூட்டிச்செய்து
தருக்கவல்லோ தாய்பதத்தைப் போற்றிசெய்து
தமர்கிளையுங் கடைத்தேற வேணுமென்று
இருக்கவல்லோ வேணுமென்று சொன்னேனப்பா
ஈடேறிந்து போனாக்கா லென்னசெய்வேன். 88

என்னமோ யெப்படியோ வென்றுநீயும்
இருந்தாக்கா லாரிவிடுஞ் சொன்னேன்பாரு
வன்னமோ வாய்ப்பான மும்மூலத்தை
மைந்தனே யனுதினமு முண்டுதேறு

நன்னமே நாதாந்த அறிவிற்சேரும்
நாலைந்து வாசலை யுடைத்துக்கொள்ளு
முன்னமே சொன்னதொரு முறைறையைக்கொண்டு
மூதண்ட பிரமத்தில் முழங்குவாயே. 89

முழங்குகின்ற சத்தமடா யிடிபோல்வீழும்
முச்சுடரு மொன்றாக மோதிக்கொள்ளு
அழுங்குகின்ற அறுவரையு மெடுத்தேயோடும்
அப்புறமுந் தோற்றுகின்ற ரவியும்வீசும்
மழுங்குகின்ற மனோன்மணியாள் வாசல்சென்று
மந்திரத்தைக் கட்டறுத்து மதிக்கப்பெற்று
இறங்குகின்ற வடிவாகி யிருந்துவாழ்ந்து
ஈசனுக்கு மேலாக யிருந்துகொள்ளே. 90

கொள்ளவென்று உந்தனுக்குப் புத்திசொன்னேன்
குறையாத பரகெதியைப் பெறவேசொன்னேன்
அல்லவென்று அரிபீடம் பார்க்கச்சொன்னேன்
ஆயிரத் தெட்டுமல ரறியச்சொன்னேன்
வல்லவென்ற வாமமதை யுண்ணச்சொன்னேன்
வாய்வான சுழலிலே வாழச்சொன்னேன்
மெல்லவே மெய்஢்ஞானங் கூடச்சொன்னேன்
மேன்மையுள்ள பரகெதியில் மேவிக்கொள்ளே. 91

கொள்ளவென்று யென்குருவே குமாரநாதர்
கொடியதொரு ஞானமெல்லாங் கூர்ந்துசொன்னீர்
அல்லவென்று தெய்வம்வே றில்லையென்றீர்
அரூபமாய் நின்றபொரு ளாகுமென்றீர்
வல்லதொரு வஸ்தோடே வாழச்சொன்னீர்
வாழ்வான சுழல்தனிலே யிருக்கச்சொன்னீர்
மெல்லதொரு மெய்ஞ்ஞான ஆன்மாவாகும்
மேதினியி லிருக்கின்ற சொரூபஞ்சொல்லே. 92

சொல்லுகிறே னென்மகனே நன்றாய்க்கேளு
சூட்சமுள்ள ஆன்மாவுஞ் சுருதிமார்க்கம்
வெல்லுகிறே னென்னாளுஞ் சொல்லக்கூடா
வெட்டவெளி யானதொரு சொரூபந்தன்னை
அல்லுகிற ஆணுமல்ல பெண்ணுமல்ல
அப்பனே அலியல்ல சொன்னேன்கேளு

தன்னாகிற பெரிதல்ல சிறிதுமல்ல
தானாக நின்றவர்கள் தன்மைதானே. 93

தானென்ற உள்வீட்டி லிருந்தசோதி
தம்பிரான் றனையறிய வகையைக்கேளு
ஊனான முன்சொன்ன மூலமுண்டா
லுத்தமனே சோதிதனை உள்ளேகாண்பாய்
தானான நாதமதை யறிந்துகொண்டான்
நந்திகொலு விருக்குமங்கே நாடிக்காண்பாய்
ஆனான அரூபவெளி தானுந்தோணும்
ஆதிவஸ்தை யறிவினா லறியலாமே. 94

அறியவே யானுமினி கண்டுகொண்டேன்
அதினாலே யறுமுகவ னென்றுபேரு
பிரியலாம் பிருதிவியைப் பிடித்ததாலே
பேசாத வஸ்துவினால் பிரபலமுமானேன்
துரியலர்ந் துரியமுந்தான் துரந்துபோகுந்
துவாதசாந்த வீதியினின் றுலாவிக்கொண்டேன்
பரியலாம் பரிமீதி லேறிக்கொண்டேன்
பால்மணிக் கொலுவில்வீற் றிருந்திட்டேனே. 95

வீற்றிருந்தேன் வெட்டவெளி யாகவுந்தான்
வேசையர்கள் காமமதை வெறுத்துச்சொன்னார்
பார்த்திருந்தேன் பருவனாவாய்த் திரண்டபின்பு
பாவையர்தன் மோகமுந்தான் பதிவாய்க்கொய்தேன்
ஏற்றிருந்த மோகமெல்லாம் மேலேகொன்றேன்
என்னசொல்வே னிம்மார்க்க மிதுதான்மைந்தா
காத்திருந்து சுரோணிதத்தை மேலேவாங்கிக்
கபாலமணி வாசலையுங் கலந்திட்டேனே. 96

கடந்திட்டே னறுசுவையுங் கழித்துக்கொண்டேன்
காரணமா மூர்த்தியென்றுங் கருதினார்கள்
அடர்ந்திட்டே னம்பலத்தி லாடல்செய்தேன்
ஆச்சரிய மானதையு மறிந்துகொண்டேன்
படர்ந்திட்டேன் பராபரத்தோ டொடுங்கிநின்றேன்
பகலிரவு தானாகிப் பதியும்பெற்றேன்
நடந்திட்டே னடனமுந்தா னாதங்கொண்டேன்
நானாகி நீயாகி யிருந்திட்டேனே. 97

நந்திட்டே னென்னைத்தானு மீசனென்று
  எல்லோரும் போற்றவுந்தா னருளும்பெற்றேன்
நந்திட்டேன் மனோன்மணியை நடுமையத்தில்
  மாருட்ட வாசியெல்லா மறைத்துப்போட்டேன்
றைந்திட்டேன் ஞானமெல்லாம் முனக்கேயீந்தேன்
  அபுரூப மானதையு மறியச்சொன்னேன்
றைந்திட்டேன் பக்குவந்தா னிதுதானென்று
  வாதான ஞானமதை நாட்டினேனே. 98

ட்டியடா புத்திமதி யுனக்கேசொன்னேன்
  நலமில்லா காரியத்தை தவிர்க்கச்சொன்னேன்
ட்டியடா நெஞ்சமுக்கை வாங்கச்சொன்னேன்
  வயிரமங்கே யிருக்குதென்று வழியுஞ்சொன்னேன்
ட்டியடா நாமத்தைக் கொள்ளச்சொன்னேன்
  நந்திதனி லேயிருந் தாளச்சொன்னேன்
ட்டியடா கருவிகளைக் கொல்லச்சொன்னேன்
  கபடசித்த முத்தனென்று வந்திட்டாயே. 99

ந்திடவே வச்சிரவடி வேலுங்கிட்டும்
  வழக்கான வாசியுந்தான் வழிபார்க்கா ளும்
ந்திடவே தமர்திறக்கும் வாசல்தோ ளும்
  தாயான சிற்பரையுஞ் சுத்தியாவாள்
ந்திடவே விந்துவுந்தான் கட்டிப்போகும்
  வீருன வீரியமுந் தனித்துப்போகும்
ந்திடவே யதிரூப வெளியுமாவாய்
  ஆதிவஸ்து நீயாவா யறிந்துபாரே. 100

ாரப்பா கேசரியாள் மனோசித்தி
  பாரிலுள்ள மும்மூலம் பகர்ந்துகொண்டால்
ஆரப்பா ஆதிவஸ்து நீதானுச்சு
  யரூபவெளி தன்னிலே யடங்கிநில்லு
நேரப்பா நினைவான ஆசைதள்ளு
  நித்திரையைப் போக்கியினி நினைவாய்நில்லு
காரப்பா கடம்பவனத் தருகேசெல்லு
  காவலர்கள் தன்னையுந்தான் கருவாய்க்கொள்ளே.()

கொள்ளடா மும்மூலங் கொள்ளாவிட்டால்
  குருவறியக் காமமுந்தான் குதித்தேயோடும்

அல்லடா அம்மூலங் கொண்டீராகுல்
அணுவளவு காமமுந்தா னசையாதையா
மெல்லடா பதின்மூன்று வருடங்கொள்ள
மேதினியிற் சஞ்சரித்து விரும்பிநில்லும்
வல்லடா வல்லவனு யோகம்பார்த்து
வாய்வான சுழல்தன்னில் வருந்திநில்லே. 102

நில்லடா மும்மூலங் கொண்டபோது
நினைவற்று ஆசையற்றுப் பொரியுமற்றேன்
அல்லடா சாதிகுலஞ் சமையமற்றேன்
ஆருமிரு ளுமௌனவே யாகிநின்றேன்
வல்லடா பரவிஷய மதமுமற்றேன்
வையகத்தோ ரென்னையுந்தான் வணங்கப்பெற்றே
செல்லடா செல்வமயி லேறிக்கொண்டேன் [ன்
சிவமான குருபதத்தைப் போற்றினேனே. 103

போற்றினே மென்றுசொல்லிச் சொன்னீரையா
புகழான மும்மூலங் கொண்டோமென்றீர்
யேற்றியதோர் கற்பமுந்தான் தேகத்துள்ளே
யிருக்குதென்று யெம்பிரா னெனக்குச்சொன்னீர்
வாழ்த்தினதோ ரிதைவிட்டாற் கற்பந்தானும்
வையகத்தி லிருக்கின்ற வகையுஞ்சொல்லுஞ்
சாத்திநீ ரெந்தனுக்குத் தயவாய்ச்சொல்லும்
சண்முகனே அந்தவழி சாற்றுவீரே. 104

சாற்றுகிறேன் விபரமாய் மைந்தாகேளும்
தாரணியிற் கற்பத்தைத் தெரியச்சொல்வேன்
ஏற்றுகிற தாரணியில் கற்பந்தானும்
இருக்குதென்று சொல்வதல்லா லில்லையில்லை
வாழ்த்துகின்ற வையகத்தோ ரோடியோடி
வாழ்வதல்லால் வேறொன்று கற்பமில்லை
போற்றுகின்ற மும்மூலக் கற்பமுண்டால்
பொய்மாய்கை தானிறந்து போகுந்தானே. 105

போகுமடா செடிபூடு கற்பமல்ல
புகழான சரக்குவகை தானுமல்ல
ஆகுமடா அவரவர்கள் அறிவுக்குள்ளே
அடங்கிநிற்கும் கற்பமதை யுண்ணுமைந்தா

நாகமடா நாதமணி யங்கேநிற்கும்
    நளிவமென்ற சாரையிந்தா னுள்ளே நிற்கும்
பாருமடா பருவமலைக்குள் ளிருந்துயேறும்
    பச்சைமால் காவலென்றும் பகர்ந்திட்டோமே. 106

பகர்ந்திட்டோம் கருநெல்லி மரந்தான்கேளு
    பணுரைந்து கொம்பென்று பகர்ந்தேநிற்கும்
அகர்ந்திட்ட வாசலது ஒன்பதாகும்
    ஆருனுடைய காவலது ஐயாசொன்னேன்
இகர்ந்திட்ட இந்திரகிரி மாமிதாகும்
    ஈராறு தலைமுண்டு இதுக்குமைந்தா
தகர்ந்திட்டா லொன்றுக்கு மாகாதப்பா
    தற்பரமாய்ச் சொல்லுகிறேன் சார்ந்துகேளே. 107

கேளடா அதுபழுத்து விழுகுளிந்தங்
    கெடியாக அப்பழத்தை விட்டிடாதே
ஆளடா அதையெடுத்து உண்டாயாகில்
    அப்பவல்லோ மும்மூல முண்மையாச்சு
மேளடா இப்பழத்தை உண்ணுவிட்டால்
    மெஞ்சானியாகவுந்தான் மாடாய்சொன்னேன்
ஆளடா இதையெடுத்துக் கொண்டாயானல்
    ஆன்மாவும் நீயாச்சு அறிந்துபாரே. 108

பாரென்று இப்படியே சொன்னீரையா
    பழுதில்லா நாதமதைப் பகரச்சொன்னீர்
ஆறென்ற சாதிவகை யைந்தென்றார்கள்
    அவருடைய நாதமதை யறிந்துகொள்வேன்
நீரறிய நிலைவாகச் சொல்லவேணும்
    நிவ்வரமா யெந்தனுக்கு உரைக்கவேணும்
காரறிந்த கரிமுனையைக் காட்டவேணும்
    கபடத்து எந்தனுக்குக் கருதுவீரே. 109

கருதுகிறேன் கருமறப்பை மைந்தாகேளு
    கன்யர்கள் சாதியுட கபடைக்கேட்டீர்
அழுதுகிற சாதியைந்து வகைகளென்றீர்
    அதுவெல்லா மெந்தனுக்கு அறியச்சொன்னேன்
நிழுதுகிற சாதிவகை யொன்றேயாகும்
    நீநிலத்தி லெவரிடத்தும் நீயுட்வாங்க

பருகுகிற சாதியெல்லா மவனேயாகும்
　　பராபரந்தா னறியவிது பகர்ந்துவாங்கே. 110

வாங்கடா யென்றானை உறுதியாக்கி
　　மைந்தனே ஞானமதை யறிந்துகொண்டு
தாங்கடா சாதியைந்து விவரஞ்சொன்னேன்
　　தன்மையுந்தான் சாற்றுகிறேன் தனியாய்க்கேளு
ஓங்கடா வோடியுந்தா னிறந்துபோகா
　　உமைபா லுலகத்திற் றுறவுஞ்செய்தான்
தாங்கடா அதையறிய வேறுமென்று
　　சனங்களெல்லாந் துறந்தார்கள் சார்ந்துகேளே.

கேளடா சாதிவகை யொன்றேயாகும்
　　கெடியான ஜனங்களெல்லா மொன்றேயாகும்
ஆளடா நாமெல்லா மொன்றேயாகும்
　　அவனிசரா சரங்களெல்லா மொன்றேயாகும்
நாய்கென்ன சாதியெல்லா மொன்றேயாகும்
　　நலமான ஜாதியைத்தான் நீக்காதப்பா
வாளடா யிதையறிந்து மைந்தா நீயும்
　　வஸ்தான வஸ்துவையும் பூசைகொள்ளே. 112

கொள்ளடா யானுமந்தப் படியேசெய்தேன்
　　குமாரனென்று பேராகிக் கீர்த்திபெற்றேன்
அல்லடா யென்னைப்போல யுண்டரானால்
　　ஆதிவஸ்தை யறிந்திடுவாய் ஐயாசொன்னேன்
மெல்லடா சுடரிலையுஞ் சொக்கிவாழ்வாய்
　　மேன்மையென்று பாரெகதியு மேவிக்கொள்வாய்
வல்லடா வல்லவனே யிருந்து நீயும்
　　வஸ்தான வஸ்துவிலே வளருவாயே. 113

வளரவல்லோ வகைவகையாய் புத்திசொன்னேன்
　　வாய்ப்பான மும்மூலங் கொள்ளச்சொன்னேன்
அளரலவோ அழிகுழியை மறக்கச்சொன்னேன்
　　ஆருயிரு மென்று நினைக்கச்சொன்னேன்
தளரவல்லோ தாய்பாதத்தை வணங்கச்சொன்னேன்
　　தன்மையா யனுதினமு மிருக்கச்சொன்னேன்
கழலுகிற காமத்தைக் கடக்கச்சொன்னேன்
　　கரைகாணப் பொருளதனைக் காட்டினேனே. 114

காட்டினே னென்னைப்போலே ஆசானுண்டோ
கருநெல்லி மரத்தையுந்தான் கருதுவாரோ
பூட்டினே னென்னைப்போல் பூட்டுவாரோ
புதுமையால் வெளிதுறந்து பொருள்சொல்வாரோ
நாட்டினே னென்னைப்போல சித்தனுண்டோ
நல்வினையுந் தீவினையு மறுப்பாருண்டோ
சூட்டினேஞ் சூாசங் காரஞ்செய்தேன்
சுப்பிரமணிய ரென்றெனக்குப் பேருமாச்சே. 115

ஆச்சப்பா சூரசங் காரஞ்செய்தேன்
அசுரர்களை தன்னையுந்தா னறுத்துப்போட்டேன்
வாச்சப்பா வாசியடி வேலைவாங்கி
வல்லபையுந் தன்னையுந்தான் பூசைசெய்தேன்
ஏச்சப்பா பூசைதான் செய்யும்போது
இந்திரவி வொளிவிருல் பிரகாசமாச்சு
வாச்சப்பா கருவிகள்தா னிறந்துபோச்சு
வச்சிரமிட்ட காயமாய் வலுத்துப்போச்சு. 116

வலுவாகி வடிவேலை வாங்கிக்கொண்டேன்
வாய்வான சுழல்தனிலே சொக்கிக்கொண்டேன்
அலுவாகி ஆயிரத்தெட் டிதழுங்கண்டேன்
அடங்காத சமாதியிலே அடங்கிச்சென்றேன்
நலுவாத நாதமணி நானுங்கண்டேன்
நாராச மானதையுங் கட்டிப்போட்டேன்
கருவாகிக் கருமுனையில் கறைந்தேசென்றேன்
கரைகாணாப் பேரொளியிற் கட்டுண்டேனே. 117

கட்டுண்டே மனந்தேறிக் காணவேணும்
காதலர்களை வரையுங் கடத்தவேணும்
அட்டுண்ட அறுசுவையைத் தள்ளவேணும்
ஆசானைக் கண்டாக்கால் வணங்கவேணும்
மட்டுண்ட மகாமேருவிற் செல்லவேணும்
மதனையா யனுதினமும் வாழவேணும்
வட்டுண்ட வகாரநிலை யறியவேணும்
வகைவகையாய்க் கருவிகளை வதைத்துத்தள்ளே.

வதைத்திடவே வஞ்சகங்க ளானதெல்லாம்
வச்சிராதி மார்க்கத்தில் வாரித்தாக்கும்

அதைத்திடவே யாறுதல மெடுத்தேசென்றால்
ஆயியுட பாதமது அறிவில்வாய்க்குந்
சதைத்திடவே சதைநரம்பு மிறுகிப்போகுஞ்
சனமான உறவின்முறை தானேமாளும்
அதைத்திடவே அருபவெளி நீயுமாவாய்
ஆசானைப் போலவுந்தா னருளுமாச்சே. 119

ஆச்சப்பா மாசற்ற சித்தனுவாய்
அண்டசரா சரங்களெல்லா மாடச்செய்வாய்
எச்சப்பா சொல்லவில்லை யிந்தமார்க்கம்
இடுப்புகளை யீடழிக்கச் சொன்னேன்சொன்னேன்
வாச்சப்பா மெய்ஞ்ஞான வெள்ளங்கொண்டு
வஞ்சகங்க ளனுவளவும் வைக்கவேண்டாம்
மூச்சப்பா மூச்சற்ற யிடமுந்தோணும்
முக்கியமாய் ஞானவெள்ள முழுங்குவாயே. 120

முழுங்கவல்லோ முன்னணியாய்மொழிந்துசொன்னேன்
மோசமில்லாமுனையில்நின்று முழுங்கச்சொன்னேன்
அழுங்கவல்லோ மனத்தழுக்கை யறுக்கச்சொன்னேன்
ஆயியுட பாதமதை போற்றச்சொன்னேன்
மழுங்கவல்லோ மன்மதனை யறுக்கச்சொன்னேன்
மாருட்டப்பேச்சையெல்லாம் மதிக்கச்சொன்னேன்
வழுங்கவல்லோ வாசியைத்தான் வாங்கச்சொன்னேன்
வஞ்சகத்தை யூடறுத்து மனத்தில்தங்கே. 121

தங்கடா ஜெகதலத்தி லோடாதையா
தன்மத்தைச் செய்துவா மறக்காதையா
அங்கடா அங்குஷ்ட மாகத்தானும்
அழகான மும்மூல மறிந்துசொன்னேன்
பங்கடா பொட்டலர்போற் றிரியவேண்டாம்
பலபல கற்பமதை யடுக்கவேண்டாம்
சிங்கடா சிங்குவையும் பூட்டிநீயும்
சிவகாமி பாதமதை தினந்தான்போற்றே. 122

போற்றினேன் புலியூரி லடுத்துச்சென்றேன்
பொல்லாத கருவிகளைப் போக்கச்சொன்னேன்
ஏற்றினேன் கலைமாறி யிழுத்துக்கொண்டேன்
ஈசனங்கே வீற்றிருந்த யிடமுங்கண்டேன்

வாழ்த்தினேன் வச்சிரவடி வேலுங்கண்டேன்
வயிரமணி மேடையிலே மேவிச்சென்றேன்
ஆற்றினேன் அறுகோண வீட்டிலேயும்
அடைப்பறுத்து அங்கேயுந்தா னிருந்திட்டேனே.
இருந்திட்டேன் சோதியைத்தான் பார்க்கும்போது
எவராலும் மதிக்கரிது யென்னசொல்வேன்
அருந்திட்டேன் மும்மூலங் கொண்டதாலே
அச்சுடரில் சொக்கியினி அருளும்பெற்றேன்
பறந்திட்டேன் பராபரத்துச் சித்தனானேன்
பாவங்க ளானதையும் பறிவாய்க்கொன்றேன்
வருந்திட்டேன் வஞ்சகங்க ளற்றதாலே
வாசிவடி வேயெனக்கு வாய்த்ததென்றே. 124

வாய்க்குமோ ரசையாத மணிபூரகத்தை
வலுவாக அடுத்தேறி வைகுதனைக்கண்டு
ஏய்க்குமே யென்றுசொல்லி யிருந்திடாதே
என்மகனே பூரகத்தி லெண்ணியேறும்
பாய்க்குமே பரியேறி நடத்தச்சொல்லும்
பாசாங்க மானதையும் பகட்டிக்கொல்லும்
வாய்க்குமே ஞானமுந்தான் வந்துகூடும்
வலுவாச்சு தேகமுந்தான் மைந்தாபாரே. 125

பாரப்பா ஜெகதலத்தி லோடினாலும்
பஞ்சவர்னக் குட்டிகளைப் பணிந்திட்டாலும்
ஆரப்பா தீர்த்தங்க ளாடினாலும்
அடிமுடியும் அரன்பாத மறிந்திட்டாலும்
தேரப்பா மும்மூலங் கொல்லாவிட்டால்
நிச்சயமாய்ப் பரகெதியுங் கிட்டாதப்பா
காரப்பா மும்மூல குருவுந்தன்னைக்
கண்டாக்கால் கடைத்தேறிக் கொள்ளுவாயே. 126

கொள்ளவே மும்மூலங் கொண்டபேர்கள்
கோடியிலே யொருவனடா குறித்தேநிற்பான்
அல்லவே யறுத்தாலு முண்ணமாட்டான்
ஆருயிரு ளுமென்று நினைக்கமாட்டான்
நல்லவே வாய்ஞானம் பேசிப்பேசி
நாதாந்தப் பேரொளியில் நாடமாட்டான்

அல்லவே மும்மூலங் கொண்டவரானால்
அரண்முனையிற் சொக்கியினி வாழலாமே. 127

வாழாமல் போகாமல் மைந்தாசொன்னேன்
மதலையெனசொரூபமுந்தான் மதிக்கச்சொன்னேன்
ஆழாம லாண்டுகொள்வா யிந்தமார்க்கம்
அடக்கமுள்ள முனையிலே யறிவாயேறி
நாளாமல் நாள்விழுப்பஞ் செய்திடாதே
நந்திகொலு விருப்பிடத்தில் நாடிச்செல்லு
பாலாநீ பாழாகப் போகவேண்டாம்
பச்சைமயி லேறியுந்தான் பரிகுவாயே. 128

பரியவல்லோ வேணுமடா சொன்னேனப்பா
பார்தனிலே யிருந்ததிலே பலந்தானேது
அரியவல்லோ ரூவமதை யடுத்துக்காரு
யச்சுதங்கள் தெரிந்துநீ அறிவாய்நில்லு
பிரியவல்லோ பிருதிவியைப் பிடித்துயேறி
பிசகாமல் நந்தியுட பீடங்காணும்
நரியவல்லோ நாகமதை யாண்டுகொள்ளு
நாதாந்தச் சிவமணியை நாடிக்காணே. 129

காணடா கணக்கான படியுஞ்சொன்னேன்
கயிலாய நாதரையுங் காணச்சொன்னேன்
ஆணடா ஆணவத்தை யடக்கச்சொன்னேன்
ஆயிரத்தெட் டுள்ளமல ரறியச்சொன்னேன்
நாணடா அப்படியே புகுந்துவாழ்ந்தேன்
நந்திகொலு விருப்பிடத்தில் நாடிச்சென்றேன்
நாணடா அண்டரண்டம் புகுந்துவந்து
நாதாந்தப் பேரொளியில் நாடினேனே. 130

நாடினேன் ஜெகமெல்லாம் பணிந்துகொண்டார்
நாதனென்று ஜெகமெல்லாம் போற்றுமைந்தா
ஆடினேன் ஜெகமெல்லாம் நிறைந்துநின்றேன்
அண்டபரா பரனென்று அருளும்பெற்றேன்
பாடினேனே தலங்களெல்லாம் பரிந்துநின்றேன்
பகல்மதியின் மேடையிலே பதிவாய்ச்சொன்னேன்
சூடினேன் வாசியைத்தான் மலராகச்
சூரசங் காரமுந்தான் செய்திட்டோமே. 131

செய்திட்டோ மெவ்வுயிரும் நானுமானேன்
சிவனுக்கு மேலான சிவனுமானேன்
அய்திட்டேன் யவ்வூரி லறிவாய்ச்சென்றேன்
ஆதிமகா மூலமென்று மருளேபெற்றேன்
கைதிட்டேன் கருவூரிற் கடக்கநின்றேன்
கன்மமென்ற பாசங்கள் கடத்திப்போட்டேன்
மெய்த்திட்ட மெய்ஞ்ஞானி குருவுமானேன்
மேலான பதவியிலே மேவினேனே. 132

மேவியே யெங்குமாய் நிறைந்தோமென்றீர்
மெய்ஞ்ஞான முழுவதையும் பெற்றோமென்றீர்
ஆவியே மும்மூலங் கொள்ளாமற்றான்
அதிசயமாய் சிரஞ்சீவி யருளுமுண்டேன்
தாவியே வாசியதைப் பாராமற்றான்
தனவானே யவனுருந் தகைமைசெய்வீர்
ஆவியே அறுமுகமே குருவேசுவாமி
ஐயனே யிந்தவகை யருளுவீரே. 133

அருளுகிறே மென்மகனே மாணுகேளு
அப்பனே சிரஞ்சீவி யருளக்கேட்டோர்
வருளுகிற மும்மூலங் கொள்ளாவிட்டால்
வடிவுள்ள தேகமுந்தான் மாண்டுபோகும்
உருளுகிற சிரஞ்சீவி கேட்டால்நீயும்
உத்தமனே சிரஞ்சீவி யுரைத்துச்சொல்வேன்
அருளுகிற பேரொளியைக் காணுதார்க்கு
அரூபமுள்ள சிரஞ்சீவி யாகாதென்றே. 134

ஆகாத சிரஞ்சீவியின் வயதுகேளும்
அப்பனே அரனுக்கு வயதேதசொல்வேன்
வேகாத விஷ்ணுவுக்கு வயதுஞ்சொல்வேன்
வேதனுக்கு மப்படியே பிரித்துச்சொல்வேன்
நாகாத நாட்டிக்கு வயதுகேளு
நாட்டிலுள்ள ரவிமதிக்கு நாடிச்சொல்வேன்
போகாத பூமிக்கும் வயதுசொல்வேன்
புத்திரனே யென்மகனே பொருந்திக்கேளே. 135

கேளடா பதினெட்டு யுகமாய்நிற்கும்
கெடியாரத் தொண்ணூற் றிரண்டுகோடி

ஆளடா வெல்லோரு மிறப்பாரப்பா
ஐயனே அஷ்டகெஜ மடிந்துபோகும்
நாளடா மண்மலைக ளிறந்துபோகும்
நலமான மாந்தரெல்லாம் நாமாவாக
வாளடா மும்மூலங் கொண்டபேர்கள்
வஸ்தான வஸ்தோடே வளருவாரே. 136

வளருவார் மாயனு மாண்டுபோவார்
மைந்தனே மகாதேவ ரிறந்துபோவார்
தளருவார் செகமெல்லாந் தகர்ந்துபோகுந்
தானான சிரஞ்சீவியுந் தமைப்பாரப்பா
அளருவார் மும்மூலங் கொள்ளாவிட்டால்
ஆருமிரு மப்படியே மடிந்துபோகும்
அலரவே யிப்படியே திரிந்து நாளும்
அல்லோரு மாண்டார்க ளனர்த்தந்தானே. 137

நானென்ற மும்மூலங் கொண்டதாலுஞ்
சாகாத வஸ்தோடே சார்ந்தேநிற்பார்
ஆனென்ற அருபவெளி தானுமாவாய்
அழியாத வஸ்தோடே யறிவாய்நிற்பாய்
ஊனென்ற உடல்தானு மழியாதப்பா
ஒருநாளுஞ் சாகாம லுறுதியாவாய்
நானுன வென்றுகவி பாடினூலும்
நாதாந்தப் பேரொளிவு நட்பைக்காணூர். 138

காணமல் மாந்தரெல்லா மிறந்துபோனூர்
கடூடமறச் சொல்லவில்லை கருவாய்க்கேளு
ஆனான மும்மூல மெடுத்துக்கொண்டால்
அழியாத வஸ்துவுடன் வஸ்தாய்நிற்பார்
ஊனான வுபத்திரவம் நாடாதப்பா
உலகமெல்லாஞ் சித்துவிளை யாடிக்கொள்வாய்
ஆனன ஆண்பிள்ளை யானுற்கேளு
அம்பலத்தி லெறியாம லறிவாய்க்கொள்ளே. 139

கொள்ளென்று வென்குருவே குமராசொன்னீர்
கூறுலகி லெல்லோரு மிறப்பாரென்றீர்
அல்லென்று அண்டமெல்லா மிடியுமென்றீர்
அருபமட்டுந் தானழிய மாட்டாதென்றீர்

வல்லென்று வல்லவன்தா னழிவானென்றீர்
மகாசித்த ரிருக்கின்ற வகையைச்சொல்லும்
நில்லென்று அண்டமெல்லா மிடியும்போது
நிசமான சித்தருட நிலையைச்சொல்வீர். 140

சொல்லுகிறே னறிவுள்ள குழந்தாய்கேளு
சுயமான சலந்தானுங் கொதித்தபோது
விள்ளுகிற சிவத்தோடே விரிவாய்நிற்பான்
விதமான அக்கினியா யுகந்தபோது
அல்லுகிற அக்கினியாய் வளர்ந்தேநிற்பார்
அப்பனே செகமெல்லாம் மிறந்துதானால்
வல்லுகிற வலுதோடே வளர்ந்தேநிற்பான்
வகையான மும்மூல யோகிதானே. 141

தானுகித் தானவனும் வளர்ந்தேநிற்பார்
தவமான மும்மூலைத் தருகும்பாலே
வானுகி வான்முடிவும் வளர்ந்தேநிற்கும்
வல்லோரா யென்றைக்கும் வளர்ந்தேநிற்கும்
ஆனுகி யழியாத பொருளாய்நிற்பாம்
ஆயிரத்தெட் டிதழாகு மலருக்குள்ளே
ஊனுன முத்தமர்க்கு மும்மூலங்கிட்டும்
உலகத்தி லிதையறிய மாட்டாரென்றே. 142

மாட்டார்க ளென்றுசொல்லி மதிக்கவேதான்
மண்ணும்விண்ணு மிடித்துமிகி மாளுமென்றீர்
பூட்டாக வலுதொன்று அழியாதென்றீர்
பூரணமா யோகியுந்தா னழியாதென்றீர்
நாட்டாக செகமெல்லாம் மடிந்துதானால்
நலமாக படைக்கும்வகை நமக்கேசொல்லும்
காட்டாகக் கருமான மறியச்சொல்லுங்
கரைகாணு துட்பொருளைக் கருவாயுண்மே. 143

உண்மையே யென்மகனே மாணுகேளு
உற்பனமாய்ப் படைக்கும்வகை யுறுதிசொல்வேன்
திண்மையே தேவியுந்தான் வசத்தில்நின்று
திருநடனம் புரியவுந்தான் வசத்தில்நின்று
நண்ணவே அவள்பதத்தைச் சேர்ந்தேன்யானும்
நலமான பூமியைத்தான் பெருக்கிவாழ்ந்தேன்

அன்னையே அரனையுந்தான் பெருகுவாளாம்
அண்டமெல்லாம் பெற்றாயினி அருளுவாளே. 144

அருளவே அரனையுந்தான் பணிந்துயானும்
ஆத்தாளை அவர்தனக்குப் பாரிசெய்தான்
திருளவே திருக்கண்ணுங் கொடுப்பேன்யானும்
திருமந்திர உபதேசத் தியானஞ்செய்தேன்
அருளவே மும்மூர்த்தி தன்னைப்படைத்து
அண்டமெல்லாம் அரசாக ஆண்டுகொள்வார்
வருளவே மந்திரங்கள் தன்னைப்படைத்து
வையகத்தோர் வணங்கும்படி மருவுவாரே. 145

வணங்கவே ரவிமதியைப் படைத்துத்தானு
மாந்தருக்கு மாய்கைகளைக் கூடச்செய்வார்
இணங்கவே அண்டத்தைக் கோட்டைசெய்வார்
இயலான அறுசுவையை யடுத்துயீவார்
தழங்கவே பூதகணந் தன்னைப்படைப்பார்
தானுன மேருவொன்று தளத்தைச்செய்வார்
அணங்கவே யசுக்களையும் படைத்துத்தானும்
அரனென்று பேராக்கி யருளுவாரே. 146

அருளுகிற பேச்செல்லாம் யான்தானையா
அவனியெல்லாம் படைத்ததுவும் யான்தானையா
இருளுகிற பேச்செல்லாம் யான்தானையா
யீசனென்று சொல்லுவதும் யான்தானையா
வருகிற வாய்வெல்லாம் யான்தானையா
வையகத்தில் நடப்பதெல்லாம் யான்தானையா
உருளுகிற உற்பனமும் யான்தானையா
உடையவன்தா னென்றதுவும் யான்தானாச்சே. 147

ஆச்சப்பா உருவாகித் திருவுமாகி
அண்டசரா சரங்களெல்லாம் நிறைந்துநின்றேன்
பூச்சப்பா மணமாகி ஒன்றதாகிப்
புவிதனிலே மதிதேய்ந்து ரவியிற்கூட்டி
வாச்சப்பா வாசியென்ற மயிலினாலே
வஸ்தான வஸ்தாகி மேலேநின்றேன்
மூச்சப்பா மூச்சற்ற விடமுங்கண்டேன்
முருகனென்று மெந்தனுக்குப் பேருமாச்சே. 148

ஆச்சென்று யென்குருவே யறியச்சொன்னீர்
அரன்றனையு மீன்றீர ரதுவுஞ்சொன்னீர்
வாச்சென்று அரனுக்குப் பிள்ளையென்று
வையகத்தோர் சொல்லுகிற வகையைச்சொல்லும்
மூச்சென்று முக்கண்ணர்க் குபதேசித்த
முறைமையைத்தா னெந்தனுக்கு மொழியவேணும்
வாச்சென்று மிந்தவகை விபரமெல்லாம்
வலுவாக வெந்தனுக்கு வழுத்துவீரே. 149

வழுத்துகிறே னென்மகனே மாறுகேளு
வல்லவர்க்குப் பிள்ளையென்ற வகையுஞ்சொல்வேன்
அழுத்துகிற ஆத்தாளை அவர்க்கேயீந்தேன்
அதினாலே அரனுக்குப் பிள்ளையென்றார்
தொழுத்துகிற அவரையுந்தா நின்றுயானுந்
துய்யவெளி யுபதேசந் தானந்துசொல்லி
வழுத்துகிறே னதனாலே ஆசானென்று
அல்லோரு மென்னைத்தானு மருளினாரே. 150

அருளினதோர் கூத்தெல்லா மவரேயாகும்
அவனிசரா சரங்களெல்லா மவரேயாகும்
உருளினதோ ருற்பனமு மவர்தானாகும்
உன்வீட்டுக் குள்ளிருக்கு மொளிவுமாகும்
வருளுனதோர் வாய்வெல்லா மவர்தானாகும்
வையகத்தோர் நடத்தையெல்லா மவர்தானாகும்
உருளினதோ ருலகமெல்லாந் தானேயாகும்
உற்பனமாய் வெட்டவெளி யாச்சுபாரே. 151

பாரப்பா அண்டசரா சரமுமாகி
யல்லவோர் பாஷைகளாய் நிறைந்துநின்றார்
ஆரப்பா வேதமுந்தா னாலுண்டாக்கி
அவனியெல்லாம் வெவ்வேறு யருளாய்நின்றார்
காரப்பா கருவிகளாய்ப் படர்ந்துநின்றார்
காலனென்று பேராகிக் கபடமானார்
ஆரப்பா அதுவெல்லா மான்மாவாகும்
அண்டமெல்லாந் திருக்கூத்து ஆடினாரே. 152

ஆடினதோர் கூத்தெல்லா மண்டர்மெச்சி
அருபவெளி யானதிலே அடக்கமானார்

நாடினதோர் கூத்தெல்லா நாதர்மெச்சி
நடனமது புரிந்திட்டார் நாதரேதான்
வாடியெங்குந் தேடியே யலைந்திட்டாலும்
வஞ்சகரைக் காணரிது மைந்தாசொன்னேன்
பாடினதோர் மும்மூலம் பகர்ந்துகொண்டால்
பராபரனை யறியலாம் பாய்ந்துபாரே. 153

பாரேழு புவனமாய்ப் படர்ந்துநின்று
பஞ்சரத்னக் கூட்டலும் பரிந்தேநின்றால்
ஆரேது அவனிசரா சரமுமாகி
அழகான விஷ்ணுவா யருளாய்நின்றார்
காரேது கயராகி வருணனாகிக்
கண்ணுக்கு மூக்குமத்திற் கருத்தாய்நின்றார்
வாரேது வாலையென்ற சொரூபமாகி
வையகத்தோர் தங்களையு மயக்கினாரே. 154

மயங்கியே யாசைவலைக் குள்ளேயாடி
மருவியே மாந்தர்களை மயக்கிப்போட்டார்
அடக்கியே யாருயிரு மவருமாகி
அறுமுகவ னென்றுசொல்லிப் பேருமிட்டு
முயக்கியே மூவுலகு மொன்றாய்நின்ற
முருகனென்று பேருமிட்டு முறைமையானேன்
தயங்கியே தந்திமுகத் தனுவுமானேன்
தாயான சிற்பரையும் யானுமாச்சே. 155

ஆச்சப்பா ஆறுதல மையூருக்குள்ளே
அறிவான ஆண்மை யறிந்துகொண்டேன்
ஏச்சப்பா இடகலையின் கலையிரண்டும்
இயல்பாக வாங்கியினி யிழுத்துக்கொண்டேன்
வாச்சப்பா வாசிவடி வேலுங்கொண்டேன்
மாருத சிரஞ்சீவிவரம் வாங்கிக்கொண்டேன்
மூச்சப்பா முக்கணனை யமுக்கிப்பார்த்து
முன்னணியா யானுமினிக் கண்டுகொண்டேன். 156

கண்டபடி காணவென்றால் சொல்லப்போமோ
கருவான மும்மூலக் கருவைத்தானும்
அண்டர்கள் முனிவர்களுந் தேடித்தேடி
ஆத்தாளைப் பூசைசெய்து பேருபெற்றார்

வண்டபடி வாமத்தை யுண்டுகொண்டு
    வஸ்தான வஸ்தையும் வாங்கிநின்றே
மண்டலீகர் மண்டலங்கள் மனோன்மணியைக்கண்டு
    மகத்தான வாசியைத்தான் மாட்டினாரே. 157

மாட்டினார் கும்பகத்தில் மதிக்கச்சொன்னேன்
    மாருமல முதமதை யுண்ணச்சொன்னேன்
பூட்டினேன் புருவமையத் தமர்திறந்து
    பொல்லாத கருவிகளைப் போகச்சொன்னேன்
ஆட்டினே னண்டாண்ட வெளியிற்குள்ளே
    யரும்பொருளா யனுதினமும் வாழச்சொன்னேன்
காட்டினேன் கருவையெல்லாந் திறந்துமைந்தா
    கடாத்த பூரகத்தைக் கண்டுகொள்ளே. 158

கொள்ளடா வெளிதாண்டி ஒளிவுதாண்டி
    குமாருகுரு பதமான வெளியுந்தாண்டி
அல்லடா அருபமுள்ள மலரிற்சென்று
    ஆயிரத்தெட் டிதழ்மலரை யறிந்துகொண்டு
மெல்லடா மேலான வீட்டிற்சென்று
    மேனியும் நம்மதென்று மேவிக்கொண்டு
வல்லடா வாசியைத்தான் வாசிகொண்டு
    வச்சிரவடி வேலுனக்கு வாய்க்கும்பாரே. 159

வாராத பேச்சையெல்லாஞ் சொல்லவில்லை
    வாய்வான சடரையுந்தான் வாங்கச்சொன்னேன்
நேராத பேர்களுக்குத் தெளிவேது
    தினந்தினந்தான் பார்த்தாலும் வருவதேது
காராத சீஷனுக்கு குருவங்கேது
    கைமுறையை விட்டாக்கால் கலைக்கங்கேது
நேராத பேர்க்குப்பர கெதிதானேது
    நேருமென்றே சற்குருவை நினைத்துப்பாரு. 160

ஆச்சப்பா கமலபதி மலையிற்குள்ளே
    அறுகோடி வருஷமைந்தா அடங்கிநின்றேன்
ஏச்சப்பா நாலான பதவியைத்தான்
    எண்ணுமல் வஸ்துவையு மிழுத்துக்கொண்டேன்
வாச்சப்பா வஸ்தான வஸ்துவையும்
    வடிவான துப்பைமலர் வடிவைக்கொண்டேன்

ஏச்சப்பா யெங்குமின்ன வெளியாய்நிற்கு
முதுமலர்போல் மதிதனிலே யிருக்கும்பாரே. 161

பாரடா ரவிமதியைக் கண்ணதாகப்
பலகலையும் நாகமதை மாலையாக
ஆரடா தனித்திருந்த ஆன்மாவைத்தான்
ஆயிரத்தெட் டிதழ்மலரை யறிவிற்கண்டாய்
நேரடா அவருடைய நிலையைப்பார்த்தால்
நேரமொரு வர்ணமாய் நிலையாக்காட்டும்
ஆரடா அவருடைய வடிவைத்தானும்
யாராலு மறிந்துயினிச் சொல்லப்போமோ. 162

சொன்னேனடா பூரணமே வெளியதாகச்
சொரூபமா யிருக்கின்ற நிலையுஞ்சொன்னேன்
அண்ணலடா அவருடைய வடிவைச்சொல்வேன்
ஆன்மாவாய் நிறைந்திருக்கு மறிவுஞ்சொன்னேன்
நண்ணடா நாற்பத்துக் கோணஞ்சொன்னேன்
நாலைந்து வாசலையு மடைக்கச்சொன்னேன்
விண்ணடா விஷ்ணுவிட விபரஞ்சொன்னேன்
விதிபுக்கும் வகைகளெல்லாம் விரிசினேனே. 163

விரிசினே னிம்மார்க்கம் பாராமற்றான்
விடமாக சமையத்தோர் மேவிக்கேட்டார்
அரியே வாசியைத்தா னடுத்தேகண்டார்
அழகான மும்மூல மறிவாய்க்காணர்
தூரியே யீசனென்று சொல்லியல்லோ
தூளாகிச் செத்தவர்கள் துலையாதப்பா
அரியே மும்மூலங் கொள்ளாமற்றான்
அழகான சமையத்தோ ரிறந்திட்டாரே. 164

இறந்திட்டா னீனமென்று சொல்லிமைந்தா
யிடும்பாலே சமையத்தோ ரிறந்துபோனர்
அறைந்திட்ட மும்மூலங் கொள்ளாப்பேர்கள்
அரூபவெளி தன்னையுந்தா னறியமாட்டார்
நிறைந்திட்ட மும்மூலங் கொண்டானாகில்
நிசமான ஆன்மாவை நிலைக்கக்காண்பான்
பரந்திட்ட பராபரத்தைப் பிடித்தேயேறிப்
பாய்ந்துமதில் மீதேறிப் பரிவுவாயே. 165

பரியவா யிணைக்கமாய்ச் சொன்னதெல்லாம்
பாலகனே யுனக்காகப் பற்றிச்சொன்னேன்
அறியவடா அடிமுடியுந் தெரியச்சொன்னேன்
ஆயிரமுழக் கப்பத்தி னுதிசொன்னேன்
பிரியவடா கருவிகளை நீக்கச்சொன்னேன்
பேசாத வஸ்துநிலை பிரித்துச்சொன்னேன்
வரியடா வாசியுட னுணுக்கஞ்சொன்னேன்
வாய்வான சுழல்தனிலே வருந்தி நில்லே. 166

நில்லடா ஒருமனதாய் நிலையில்நின்று
நீசனென்ற காலனையும் நிகழ்த்திப்போடு
அல்லடா கேசரியாள் மவுனம்வாய்க்கும்
ஆயிரத் தெட்டுமல ரழகாய்க்காணும்
வல்லடா கருவூரில் வளர்ந்தேநிற்பாய்
வாய்ப்பான வயிரத்திரு விளக்கைக்காண்பார்
இல்லடா யீராறு தலமுந்தோணும்
அந்தரகிரி பருவதத்தி லிருக்கலாமே. 167

இருக்கலாம் அநேகநாள் மட்டுமைந்தா
இயலான வஸ்துவுந்தா னிருக்குமட்டும்
பெருக்கலாம் பிரணவத்தோ டாரெழுத்தும்
பிசகாம லுன்மனையில் பிலைத்துப்போகும்
அருக்கலா மழகான கெதியைக்கட
அசுரர்களை தங்களையு மறுத்துப்போடும்
நெருக்கலாம் பரகெதியும் நிறைந்தேகாணும்
நிட்சயமா யான்மாவில் நிலைக்கலாமே. 168

நிலைக்குமோ நிலையாது வென்றுநீயும்
நின்றுக்கால் வாரிவிடும் நிலைக்கொட்டாது
தலைக்குமேல் சுடரான வாய்வுதங்கி
தந்திதனி லேறியுந்தான் தயவாய்நின்று
அலைக்குமே ஞனேற்றி யறுத்துக்கொண்டு
அரூபவெளி தன்னிலே அறிவாய்ப்பாய்ந்து
மலைக்குமே மலையேடு மகேந்திரஞ்சுத்தி
மதலையா யனுதினமும் வாழ்வாயே. 169

வாழவே மதலையா யிருந்தேன்யானும்
மனோன்மணியா ளமுதத்தை வாங்கியுண்டேன்

ஆளவே யறுமுகமாய்ப் பார்த்துநின்றேன்
அச்சுதன் மருகனென்று அருளும்பெற்றேன்
நாளவே நாள்வளப்பமுஞ் செய்யாமற்றான்
நலமான மும்மூலம் நாடிக்கொண்டேன்
ஆளவே யமுதந்தான் புசித்தேனையா
அடங்காத சித்தனென்று மருளினீரே. 170

அருளினீ ரென்றுசொல்லிச் சொன்னீரையா
அறுமுகமே யோகவெளி யகண்டநாதா
வருளினதோர் மும்மூல வகையுஞ்சொன்னீர்
வாய்வான சுடர்தனையு முழங்கச்சொன்னீர்
வருளினதோர் தாய்பதத்தைப் போற்றச்சொன்னீர்
தமர்க்கிளையுந் தங்களையு மறுக்கச்சொன்னீர்
அருளினதோர் நாளையுந்தா சர்வர்க்கெல்லாம்
அமைத்தபடி காணுங்குயிலை அறைகிறேனே. ()

அறைகிறே னென்மகனே மாணுகேளு
அப்பனே வானமுதல் சர்வோர்க்கெல்லாம்
நிறைகிறேன் காலனென்ற நிழல்தானப்பா
நிட்சயமாய்க் கூத்தாட்டம் நிதானங்காட்டும்
வரைகிறேன் அதையறிந்து மைந்தா நீயும்
வகையான மும்மூலம் வழியாக்கொண்டால்
நிறைகிறே னவனுயிரும் போகாதப்பா
நிச்சயமாய்ச் சொல்லுகிறே நினைவாய்த்தீரே. 172

தீர்க்கமாய் மும்மூலந் தினந்தோறுந்தான்
தின்றுமல் விடாதேதஐயா திடமாய்ச்சொன்னேன்
ஆர்க்குமடா அவனுயிரும் போகாதப்பா
அகண்டவெளிக் குள்ளிருந்து ஆடச்சொன்னேன்
மார்க்கமடா மறுகத்தால் வடிவைக்காண்பாய்
மாறுத சிரஞ்சீவி மகிமையாவான்
கார்க்கவல்லோ காமமுந்தான் கட்டப்போகும்
கயிலாய நாதனையுங் காணலாமே. 173

காணலாங் கானலென்ற நிழல்தான்சாரும்
கருவியென்ற தத்துவமுங் கழன்றுபோகும்
ஆணவம் வெண்சாரை யடுத்துக்காண்பான்
அரூப வெளி தன்னிலே யடக்கிக்கொள்வான்

நாணலாம் நாதமணி கட்டிப்போகும்
நந்திகொலுவிருப்பிடமும் நாடிக்காணும்
பூணலாம் புஷ்பராக மலையிலேறிப்
பொல்லாப்பு வானத்தையும் போக்கலாமே. 174

போக்கவே யிப்படியும் வகையுஞ்சொன்னேன்
போகாத வினைகளையும் போகச்சொன்னேன்
ஏக்கவே யீராறு தலத்தைக்காண
யிதமாகப் புத்தியுந்தா னெடுத்துச்சொன்னேன்
காக்கவே காமத்தைக் கட்டச்சொன்னேன்
கபாலந்தான் திறக்கிறதோர் தடமுஞ்சொன்னேன்
தீர்க்கவே திரிபுரையைக் கண்டுகொண்டு
தெளிவான சித்தனென்று தெரிந்துக்கொள்ளே. ()

கொள்ளடா வெளிதாண்டி யொளிவுதாண்டிக்
குறையாத பேரொளியிற் கூட்டிக்கொள்ளு
அல்லடா அஷ்டாங்க நிலையுங்காணும்
ஆயியென்ற மவுனமதை யடக்கிக்கொள்ளும்
நில்லடா நிட்சயத்தைப் பத்திநீங்கள்
நித்திரையைப் போக்கியுந்தா னிணைவாய்வாழ்ந்து
வல்லடா வல்லவனு யிருந்தீரானல்
வயிரமுள்ள திருவிளக்கு வாய்க்குந்தானே. 176

வாய்ப்பாகச் சொல்லிவைத்தேன் மனதிறங்கி
வஸ்தான வஸ்திலேயும் வளரச்சொன்னேன்
ஏய்ப்பாகச் சொல்லவில்லை யிந்தமார்க்க
மிடும்பாலே மாண்டாக்கா லென்னசொல்வேன்
காப்பாகக் காலனையுங் கட்டறுத்து
கயிலாய மேருவையுங் கடந்துநில்லு
பாய்ப்பாகப் பாய்ந்துநீ பரியிலேறிப்
பராபரத்தைப் பூசித்துப் பூற்றுவாயே. 177

பற்றியே வாசியுந்தான் பதியோடும்
பங்குபங்காய்க் கருவியெல்லாம் பாய்ந்துபோகும்
அற்றவே அனுரி லடங்கிப்போகும்
அரமான தர்மமுந்தா னவர்க்கேவாய்க்கும்
பெற்றபே ரிப்படியே யானும்பெற்றேன்
பிலந்தநந்தி பீடத்திற் சேர்ந்துநின்றேன்

அற்றபின் னருணாகந் தனையறுத்தேன்
அதினாலே யாறுமுகனென்று பேரே. 178

பேராகி ஊராகிப் பெரிதுமானேன்
பேசாத வஸ்துவாய்ப் பிளத்துநின்றேன்
ஆராகி யரியாகி யயனுமாகி
அண்டசுவர் தன்னையுந்தா னடுத்துத்தாண்டி
நேராகி நிறையாகி நிர்மதியுமாகி
நிமலனென்று பேரெடுத்து நிசமாய்நின்றேன்
காராகி கயிலாய கிரியுமாகி
கடம்பவனத் தையனென்று கருதினாரே. 179

கருதினார் கந்தனென்னைக் கண்டுமெச்சிக்
கரைகாணாப் பேரொளியைக் காட்டிநின்றார்
உருசினா ருள்முனையி லொளிவாய்நின்று
ஓங்காரக் கம்பத்தி லொடுங்கிநின்றேன்
அருளினா ராசனமு தணியுமீய்ந்தார்
அடிபணிந்து காதிலிரு குழையுமிட்டார்
கருதினார் கந்தனென்று பேருமிட்டுக்
கபடற்ற சித்தனென்று கருதினாரே. 180

கருதினா ரெனைப்போல கண்டாருண்டோ
கபடற்ற வாயலையுங் கண்டாருண்டோ
அனுதினமு மும்மலத்தை யறுத்தாருண்டோ
ஆருயிரும் நாமென்று நினைப்பாருண்டோ
வருதியென்ற வாசியைத்தா னறிவாருண்டோ
வஸ்தான வஸ்தில்நின்று வாழ்வாருண்டோ
சிறிதுநாள் யானும்போ யலைந்தேயானுந்
தேவியுட கிருபையினா லறிந்திட்டேனே. 181

அறிந்திட்டே னன்மாவை யானுமைந்தா
அழகான படுகுழியைத் தள்ளிப்போட்டேன்
திறந்திட்டேன் மெய்ச்சுடரிற் சொக்கியானுந்
தூய்யமென்ற வெளியேறித் தொடர்ந்துகண்டேன்
வருந்திட்டேன் வாசியென்ற குதிரைமீதில்
வாய்ப்பாக யேறியுந்தான் மகிமைகண்டேன்
முறிந்திட்டே னுறமுறையார் தன்னைவிட்டு
முக்கியமாய் மும்மூலங் கொண்டிட்டேனே. 182

கொண்டதினாற் குருவாக்கிக் குமரனாகி
குறையாத பொருளதனிற் கூடிக்கொண்டேன்
அண்டதின லரூபமென்ற வெளியுமானேன்
ஆன்மாவே யானாகி யருளும்பெற்றேன்
வண்டபடி வண்டர்களை வதைத்துப்போட்டேன்
வாசிவடி வேலையுந்தான் வாங்கிக்கொண்டேன்
தண்டபடி தாய்பதத்தில் தனுவும்பெற்றேன்
தமர்திறக்கும் வாசனையுங் கண்டிட்டேனே. 183

கண்டபடி யேழுகட லமுர்தங்கண்டேன்
கனமான மச்சங்களைக் கரைத்துப்போட்டேன்
அண்டபடி யக்கடலி லடுத்துச்சென்றேன்
ஆசானையக்ஷணமே யறிந்துகொண்டேன்
மண்டபடி மனமுருகி மனந்தளர்ந்தேன்
மாராட்டப் பேச்சையெல்லா மதிக்கப்பெற்றேன்
தொண்டர்படி தொண்டுபண்ணி நிலைத்துக்கொண்டேன்
துவாதசாந்த வீதியிலே சொக்கினேனே. 184

சொக்கியே யிருக்கையிலே வாதவூரிற்
சுணங்கனென்ற நாய்பதத்தைச் சூழ்ந்துகொண்டேன்
அக்கினியாய் மரத்தினிலே பாலுமுண்டேன்
ஆயிரத்தெட் டிருள்பசும்பொன் னமுருமாச்சே
முக்கியமாய் மூவுலகு முருவிநின்றேன்
முச்சுடராய்த் தேகமுந்தா னொளிவுமாச்சு
பக்கியே பராபரையைச் சேணமாக்கி
பத்மகா பனையுங்குடி யாக்கினேனே. 185

மடியாக்கிக் கடுவாளங் கணைசனுக
மருத்ததோர் மயில்மீதி லேறிக்கொண்டேன்
படியாக்கி அன்பரா யரங்களெல்லாம்
பாய்ந்தேதான் கவனமாய்ச் சுத்திவந்தேன்
அடியாக்கி பூமியைத்தான் மைந்தாயானும்
அண்டரண்டவெளி யைப்பா சிரசதாக்கி
குடியாக்கிப் பூதலத்தில் மாந்தர் தன்னைக்
குறத்தியுட கணவனென்று கூறப்பெற்றேன். 18

கூறுகிக் குறையாத பொருளுமாகி
கொலைகாரனென்றுசொல்லிக் கூறும்பெற்றேன்

ஆராகி யவனியெல்லாந் தெய்வமாகி
ஆறுமுக மாகியெங்கும் அருளேகொண்டேன்
நேராகி நிலையாகி நிச்சயமுமாகி
நீங்காம லெவ்வுயிரும் யானுமானேன்
மாறாகி மன்மதசொ ரூபமாகி
மரகதமா யனுதினமும் வாழ்ந்திட்டேனே. 187

வாழ்ந்திட்டேன் தெய்வசபைக் குறவன்யானும்
வள்ளியெனுந் தேவிக்கு மணாளனானேன்
தாழ்ந்திட்ட நந்திக்குத் தமதியானேன்
தாயான சிற்பரைக்குப் பிள்ளையாவேன்
ஆழ்ந்திட்ட அரனுக்குப் பிள்ளையானேன்
அல்லோர்க்குந் தெய்வமாய் அறிவாய்நின்றேன்
காய்ந்திட்ட காலனுக்குக் கர்த்தனானேன்
கண்டவர்க்கு மெய்ஞ்ஞானங் கருதுவோமே. 188

கருதவே யிதனாலே யானுமைந்தா
காரணசற் குருவினுட கருத்தினாலே
அருந்தவே மும்மூலங் கொண்டதாலே
அரனுக்குப் பிள்ளையென்றுந் தகப்பனானேன்
வருந்தவே வாய்வினுட விளக்கத்தாலே
வயிரத்திரு விளக்கையுந்தான் வசமாய்க்கண்டேன்
திருந்தவே திரிபுரையின் கிருபையாலே
தீயான அக்கினியிற் சேர்ந்திட்டேனே. 189

சேர்ந்திட்டேன் அக்கினியிற் சொக்கிவாழ்ந்தேன்
தீர்த்தங்க ளானதையுந் திடமாய்க்கண்டேன்
தாழ்ந்திட்டே னப்புறமும் மேலேசென்றேன்
தமர்திறக்கும் வாயனுட தயவும்பெற்றேன்
தாழ்ந்திட்டேன் சுத்தசல மங்கேகண்டேன்
வாய்வான யோகத்தை வழிவாய்க்கண்டேன்
ஆழ்ந்திட்ட அண்டசுட ரழகுதன்னை
ஆராலும் சொல்லரிது ஐயாபாரே. 190

பாரென்று என்குருவே யிப்படியுஞ்சொன்னீர்
பலபல பேச்சுகளாய்ப் பகடுஞ்சொன்னீர்
தாரென்று யோகநிலை யறியச்சொன்னீர்
தமர்திறக்கும் வாய்வுதனைக் காணச்சொன்னீர்

ஆரென்று சுத்தஜல மறியச்சொன்னீர்
அதிசயங்க ளுள்ளதெல்லா மறிவாய்ச்சொன்னீர்
காரென்றீர் எனதிடத்தி லிருக்கயானும்
கடவுளே எந்தனுக்கு கருதுவீரே. 191

கருதுகிற வென்மகனே மாணுகேளு
காலனுட தேசமடா தெட்சணந்தானப்பா
அருதுகின்ற பொதிகைமலே சார்வுமுண்டு
அத்தேச மேடாக வுயர்ந்தேநிற்கும்
வருதுகின்ற அம்மலேயி லிருந்துவாழ்வாய்
மாருத சிரஞ்சீவியாய் வாழ்ந்தேநிற்பாய்
தள்ளுகிற அங்குஷ்டத் தனுவுமாவாய்
தற்பரம்போல் வடிவாகித் தானிற்பாயே. 192

தானுகி நீயாகி தானுமாவாய்த்
தந்தைபோ லனுதினமுந் தாய்போல்நிற்பாய்
ஆணுகிப் பெண்ணுகி அளவுமாய்
அவனியுள்ள சித்தர்கள்தா னடுத்துசொல்வார்
ஊனுகிச் சித்தரெல்லா முன்னைக்கண்டு
உறுதியாய்ப் போற்றிசெய்து வொடுங்கிவாழ்வார்
வானுகி வானவர்கள் போற்றுவார்கள்
வல்லவர்தா னனுதினமும் வந்திடுவாரே. 193

வந்திடுவார் முனிவரெல்லாம் வணங்கிநிற்பார்
வாய்ப்பான மாந்தரெல்லாம் வேலைக்கும்செய்வார்
தந்திடுவார் கிம்புருட ராடல்செய்வார்
சதகோடி ரவிபோலே தானுய்நிற்பார்
விந்திடுவார் விமானமென்றே வாரிபோற்றி
வீற்றிருப்பா யனுதினமும் விலகாமற்ருன்
நந்திடுவார் நந்தியிலே நாடிநிற்பாய்
நாலைந்து வாயலையு மடைத்துக்கொள்ளே. 194

கொள்ளடா முன்சொன்ன மூலமுங்ணு
குறையாது ஆயிசு கூர்ந்துபாரு
அல்லடா அணுவளவும் விட்டிடாதே
அகஸ்தியனே புத்தியா யறிவாய்நில்லு
வல்லடா வல்லத்துக் கோட்டைக்குள்ளே
வஸ்தான பராபரமும் வாய்ப்பாய்க்காணும்

நில்லடா நிட்சயத்தில் நீயும்நில்லு
நீங்காத வஸ்தோடே நிலைத்துநில்லே. 195

நில்லடா ஒருநிலையாய் நிறுத்திநீயும்
நின்றுக்கால் சிவயோகம் நெடுநாள்நிற்கும்
அல்லடா ஆறுயிருந் தான்றானென் றும்
ஐயனே அனுதினமும் நினைக்கவேணும்
வல்லடா வல்லவனா யிருந்துகொண்டு
வையகத்தோர் தங்களையு மதிக்கப்பெற்று
செல்லடா சிகரமென்ற தெல்லியுண்ணு
தீவினைகள் தானகற்றி திடமாய்நில்லே. 196

நில்லடா வாசியைத்தான் வாங்கிக்கொள்ளு
நீங்காத கருவிகளை வைத்துப்போடு
அல்லடா யெனைப்போல ஆசானையா
அப்பனே யுந்தனுக்கு வாய்க்காதப்பா
சொல்லடா சிவஞானம் தன்னைத்தேர்ந்து
சொற்பெரிய முமூட்சுதன்னைப் போற்றிசெய்து
செல்லடா சிவஞானக் கருவுக்குள்ளே
தினந்தினந்தான் பணிந்துயினி திடமாய்நில்லே.

நில்லடா சகலகலை ஞானஞ்சொன்னேன்
நீங்காத மும்மூல நிலையுஞ்சொன்னேன்
அல்லடா ஆதிவஸ்து யறியச்சொன்னேன்
அடங்காத சித்தமென்று ஆடச்சொன்னேன்
வல்லடா யோகத்தின் வகையுஞ்சொன்னேன்
வஸ்தான மும்மூலங் கொள்ளச்சொன்னேன்
அல்லடா அதையெடுத்து பூசைசெய்து
அடங்காத ஆன்மாவி லடங்கிநில்லே. 198

நில்லென்ற லோகமெல்லா முனக்குசித்தி
நேரான பூலோகம் நெருங்கியாடும்
வல்லவன்றன் செயல்விட்டால் மார்க்கமில்லை
வாலைதனை யடிபணிந்து மவுனங்கொள்ளு
கொள்ளுகிற வாசியின்றன் குறியைக்கேளு
குவலயத்தில் செய்கின்ற மார்க்கந்தன்னை
விள்ளுகிறேன் மகாரமென்ற நீறைவுண்ணு
விதிவிலக்கி வாழலா முண்மைசொன்னேன். 1[illegible]

சொன்னசொல் தவறுமல் நிலையில்நில்லு
சோதனையாய்த் தோன்றிடுமே துவாதசாந்தம்
வின்னம்வரு மவுனத்தை விட்டிடாதே
மேதினியோர் கருத்தறிந்து விவரஞ்சொல்லு
சொன்னதோர் கற்பமதை விவரஞ்சொல்லு
தோன்றுமடா உகாரமென்று மும்மூலந்தான்
திண்ணமான சிகாரமென்ற நெல்லியுண்ணு
திறமாக வாலையடி நிச்சயங்கொள்வாயே. 200

நிட்சயமா யிப்படியே முறைமையைச்சொன்னேன்
நெடுநாளாய் வாழவென்று நிதானஞ்சொன்னேன்
அட்சரமா மென்னுடைய இருநூற்றுக்குள்ளே
அடங்காத கருவையெல்லா மடக்கிப்போட்டேன்
பட்சமாய் பராபரத்து நிலையுஞ்சொன்னேன்
பாய்ந்துமயி லேறுகின்ற மகிமைசொன்னேன்
அட்சயமா யதையறிந்து மவுனங்கொள்ளு
அகஸ்தியனே ஞானமிரு நூற்றுமுற்றே. 201

## சுப்பிரமணியர் ஞானம்—200

முற்றிற்று.



திருமகள்விலாசம் பிரஸ், சென்னை;—1935,

வைத்திய வித்வன்மணி

சி. கண்ணுசாமிபிள்ளை அவர்கள் இயற்றிய

# சிகிச்சாரத்நதீபம்

என்னும் வைத்தியநூல்

[வாலையந்திரப் படங்களுடன் விலை ரூபா 2—8—0]

சென்னைமா நகரின்கண் "விடோபா" அவிழ்தசாலையை ஸ்தாபித்தவரும், "கண்ணுசாமியம்" என்னும் வைத்திய சேகரத்தின் நூலாசிரியருமான ஸ்ரீமான் கண்ணுசாமி பிள்ளையவர்கள் தென்நாடு முதல் வடநாடு வரையிலும் அனுசரித்துவரும் அரிய பெரிய பாகங்களையும் பூஜுனி வைத்திய முறைகளையும், பெரும்பொருள் செலவிட்டு முடித்து பயன் பெற்றவைகளாயுள்ள பாகங்களையெல்லாம் ஒருங்கு தொகுத்து ஒவ்வொருவரும் எளிதிலுணரும் வண்ணம் தேகபஞ்சபூதம், நாடி, ரோகநிதானம், செய்பாகவிளக்கம், இயாழம், சூர்ணம், மாத்திரை, மெழுகு, லேகியம், கிருதம், செந்தூரம், பற்பம், தீநீர், திராவகம், ஆசவம், அரிஷ்டம், பத்தியம் இன்னும் பலபாகங்களையும் இலம்பகங்களாக வரைந்துள்ளார். இந்நூல் சில வருடங்களுக்குமுன் செலவாய்விட்டதை கடிதவிலையேற்றத்தினால் உடனே அச்சிடக் கூடாமையாகவிருந்தது. ஆயினும் பலர் வேண்டுதலுக்கிணங்கி இந்நூலில் விடுபட்டுள்ள சிறிது எடை பாகங்களையும் சில செய்பாக திருத்தங்களையும் டிெ ஆசிரியர் மூலமாக திருத்தி உயர்தரமான கிளேஸ் கடிதத்தில் (மூன்றும் பதிப்பு) அச்சிட்டு இருக்கின்றோம், இந்நூல் வைத்தியத் தொழிலை கற்க விரும்பும் மாணவர்களுக்கும் வைத்தியர்களுக்கும் மற்ற ஏனையோருக்கும் பெரும் நன்மையைத் தரத்தக்க தென்பது எவரும் அறிந்த உண்மை.

சிகிச்சாரத்நதீபம் இரண்டாம் பாகமாகிய

# வைத்திய சிந்தாமணி

[விலை ரூபா 2—0—0]

இந்த "வைத்திய சிந்தாமணி" என்னும் நூலானது பூர்வாசிரியர்களில் ஒருவராகிய பூகிமாமுனி என்பவரால் கூறப்பட்டது. இதனில் ரோகநிதானங்களை ஏறக்குறைய கூறியிருப்பதினால் இதனை ஆதாரவாகக்கொண்டு வசனகாவியமாக எழுதினதுமல்லாமல், சில விடங்களில் சமயத்திற் கேற்றவாறு மற்றும் சில கிரந்தங்களினின்று சிலது சேர்க்கப்பட்டும் ஒவ்வொரு ரோகங்களின் இறுதியில் ஆங்கிலேயமருத்துவத்தில் கூறப்பட்டுள்ள ரோகநிதான விஷயங்களை மதாந்தரமாகவும் அமைத்து, காலதேச வர்த்தமானங்களுக்குத் தக்கவாறு சிகிச்சைகளையும் கூட்டி அனேக அருமைவாய்ந்த முறைகளுடன் எழுதப்பெற்றிருக்கின்றது.

B. இரத்தின நாயகர் ஸன்ஸ்,

நெ. 41, வெங்கட்ராமய்யர் தெரு, ஜி. டி. சென்னை.